

சென்னையில் இவ்வருஷம் கூடிய 42-வது காங்கிரஸ் மகாசபை.

உ
ஓம்
பரப்பிரஹ்மணேநம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 13 | பிரபவ௵ மாசிமீ ௧உ<br>1928௵ பிப்ரவரிமீ 13உ | பகுதி 8 |

## கடவுள் வணக்கம்.

அன்னே யனேயெ னுஞ் சிலசமய நின்னையே
ஐயாவை யாவென்னவே
அலறிடுஞ் சிலசமய மல்லாது பேய்போல
வலறியே யொன்று மிலவாய்ப்
பின்னேது மறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமயமேல்
பேசரிய வொளியென்றும் வெளியென்று நாதாதி
பிறவுமே நிலைய மென்றும்
தன்னே ரிலாததோ ரணுவென்று மூவிதத்
தன்மையாங் கால மென்றும்
சாற்றிடுஞ் சிலசமய மிவையாகி வேறதாய்ச்
சதாஞான வானந்த மாய்
என்னேயெ னேகருணை விளையாட் டிருந்தவா
றெம்மனோர் புகல வெளிதோ
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (1)

தந்தை தாயுநீ யென்னுயிர்த் துணையுநீ சஞ்சல மதுதீர்க்க
வந்த தேசிக வடிவுநீ யுனையலான் மற்றொரு துணைகாணேன்
அந்த மாதியு மளப்பருஞ் சோதியே யாதியே யடியார்தம்
சிந்தை மேவிய தாயுமா னவனெனுஞ் சிரகிரிப் பெருமானே. (2)

வேறுபடுஞ் சமயமெல்லாம் புகுந்து பார்க்கின்
விளங்குபரம் பொருளேநின் விளையாட் டல்லால்
மாறுபடுங் கருத்தில்லை முடிவின் மோன
வாரிதியி னதித்திரள்போல் வயங்கிற் றம்மா. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. "எங்கும் நிறையும் பொருளாகிய இறைவனே! நின்னைச் சில மதங்கள் தாயே தாயே என்னும், சில மதங்கள் தந்தையே என்னும், சில சமயங்கள் ஒன்று முணராமல் பேய்போல் ஒன்றை விட்டொன்றைப் பிதற்றும், சில சமயங்கள் நின்னை ஒளியென்றும், ஆகாயமென்றும், நாதம் முதலான பிறபொருள்கள் நின்னிருப்பிடமென்றும், உன்னை அணுவென்றும், முக்கால மென்றும் சொல்லும்; இங்ஙனம் இவைகளாகியும், இவற்றின் வேறாகியும், சதாஞான இன்பமாகி உன்னுடைய திருவருள் விளையாட்டு இருந்தவிதம் என்ன வியப்பு! எம்மைப் போன்றவர் சொல்லுதற்கு இஃதெளிதாகுமோ" என்று இறைவன் எங்கும் அவரவர்க்குத் தக்கவாறு நிறைந்த தன்மையை இதில் விளக்கினார் ஆசிரியர்.

வாமசித்தாந்தி, மிச்சிரவாமி, துவிதவாமி, அத்துவிதவாமி முதலியவர்கள், தனக்கெனவொரு தன்மையில்லாத தெய்வத்தினைப் பெண்பாலாகக் கொண்டு வணங்குவர். சிலர், அத்தெய்வத்தினை ஆண்பாலாகக் கொண்டு நாராயணன், இரணியகருப்பன், உருத்திரன் என்று பல்வேறு வகையாக வணங்குவர். சிலர், ஒரு நிச்சயமின்றித் திருமாலுந் தெய்வம், பிரமனுந் தெய்வம், உருத்திரனுந் தெய்வம், இந்திரனுந் தெய்வம், கருப்பனுந்தெய்வம், மாடனுந் தெய்வம், முனியனுந் தெய்வம் என்று எல்லாத் தேவதைகளையும், பைசாசங்களையும் சமரசமாக வணங்குவர். சிலர், ஒளி ரூபமாய் விளங்கும் சூரியன், சந்திரன், அக்கினி முதலியவற்றைத் தெய்வமெனக் கொள்வர். சிலர், எல்லாம் சத்தரூபமாகவே வழங்கப்படுதலின் சத்தமே நிலைத்தபொருளாகிய தெய்வமெனக் கொள்வர். சிலர், பரமாணுக்களே பிரபஞ்சமாய்த் தோன்றியொடுங்குதலின், அந்த அணுவே பொருளென்பர். சிலர், இறைவன் கால ரூபமாயிருந்து எல்லாவற்றையும் நடத்துவித்தலின் அவனை முக்காலமெனக் கொள்வர். இங்ஙனம் பலரும் பலவிதமாகக் கொள்ளுதலையே பல சமயங்கள் பல வகையாகக் கொள்ளுமென்றார்.

சமயம்=மதம். நாதம்=சத்தம். நிலையம்=இடம்.
எம்மனோர்=எம்மைப்போன்றவர்.

2. தாயுமானவர்=திரிசிரபுரத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சதாசிவமூர்த்தி. இவருக்கு வடமொழியில் 'மாத்ருபூதேசுவரன்' என்று பெயர். ஆசிரியர், இப்பெருமான்மீது மிக்க பற்றுடையவராதலின், இவரை நோக்கி, "தந்தை தாய் முதலிய யாவரும் நீ; உன்னையல்லால் வேறொரு துணைகாணேன்" என்றார்.

தேசிகன்=குரு. அளப்பரும்=அளத்தற்கரிய.
சிரகிரி=திரிசிரபுரத்திலுள்ளமலை.

3. இதில், 'எல்லாச் சமயங்களுள்ளும் பரம்பொருளாகிய கடவுளின் திருவிளையாடல்களே நிறைந்திருக்கின்றன' என்று, எங்கும் நிறைந்த கடவுளின் வியாபகத் தன்மையை விளக்கினார் ஆசிரியர். சமுத்திரத்தில் நதிக் கூட்டங்கள் சம்பந்தித்திருத்தல்போல கடவுளிடத்தில் பல மதங்களின் கூட்டம் சம்பந்தித்திருப்பதால், 'மோன வாரிதியின் நதித்திரள்போல் வயங்கிற்று' என்றார்.

பரம்பொருள்=பெரிய பொருள்.
மோனம்=மௌனம். வாரிதி=கடல்.

*




## கடவுளுக்குக் கைக்கூலி.

கடவுள் எல்லோருக்கும் தந்தை. அவர் எல்லோரையும், எல்லாவற்றையும் படைத்துக் காத்தருளுகின்றார். மனப்பற்றுதலோடு அவரை வழிபடுவோர்க்கு எவ்வித குறைவும் ஏற்படாது. உலகத்தில் துன்பமின்றி வாழ்ந்து மறுமையில் பொன்னுலகவாழ்வு முதலிய பேறுகளை அடையவேண்டுமென்று கடவுளைத் தொழுவோர்க்கு அவர் அவற்றை அளிக்கின்றார். பிறப்பற்றுக் கடவுளடியைச் சார்ந்து பேரின்பமெய்தி நித்தியவாழ்வை அடையவேண்டுமென்று கடவுளைத் துதிப்பார்க்கு அவர் அவ்வாறே நித்தியவாழ்வாகிய முத்தியை அளிக்கின்றார். அக்கடவுளுடைய நினைவேயின்றி, உலகவாழ்வு நிலைத்ததென்றெண்ணி நிலையற்ற சிற்றின்பத்தை விரும்பி, மரணமுண்டென்பதை மறந்து, உலகமாயையிற் சிக்கி உள்ளத் தெளிவின்றித் திரிவாரை, கடவுள், பற்பல பிறவிகளையெடுத்துத் துர்க்கதிகளுட் புகுந்துழன்று வருந்தும்படி செய்கிறார்.

இவ்வுண்மைகளையுணர்ந்த அறிஞர், நற்பேறுகளையேவிரும்பி அவற்றைத் தரும்படி கடவுளைப் பிரார்த்தித்து விரும்பிய அவற்றை அடைந்தின்புறுகின்றனர். இவற்றை யுணராத அஞ்ஞானிகள் கடவுளை மறந்து பயனற்ற காரியங்களைப் புரிந்து தீக்கதிகளுட் சென்றுழலுகின்றனர்.

இவர்கள் செய்கை இப்படியிருக்க வேறுசிலபேதையர், கடவுளை வேண்டினால் அவர், தாங்கள் விரும்பியவற்றையெல்லாம் செய்து முடிப்பாரென்னும் தீர்மானமுடையவர்களாய், அநேகம் கெட்டகாரியங்களைச் செய்யத்தொடங்கி, அவற்றை நிறைவேற்றுதற்குக் கடவுளுக்குக் கைக்கூலி (இலஞ்சம்) கொடுத்து அவரைக்கொண்டு அச்செயல்களை முடிக்கப் பிரயத்தனப் படுகிறார்கள். இவர்கள் பக்திமூடர்களெனப்படுவார்கள்.

இவர்கள், இலஞ்சம் வாங்கிக்கொண்டு நடுநிலைமையற்று நீதிக்கு விரோதமான காரியங்களைச் செய்யும் சில தாழ்ந்த அறி

வுள்ள அதிகாரிகளைப்போலக் கடவுளையும் நினைத்துக் கொள்கிறார்கள். இந்தப் பக்திமூடர்கள், "பகவானே! உனக்கு உயர்ந்த பூசனை புரிகிறேன்; நீ எனக்கு நற்கதியைக்கொடு" என்று தெய்வத்தை வேண்டுவதில்லை. கெடுதிகளையே செய்ய வேண்டுகின்றனர்.

எப்படியெனில், இவர்களுட் சில மூடர்கள், தாங்கள் நியாயமன்றி விரோதித்துக் கொண்டவர்களைக் குறித்து, "ஈசனே! நீ மெய்யான தெய்வமானால், உன்னை நான் நம்பியிருப்பது மெய்யானால், என் விரோதியின் பிள்ளைகுட்டிகளெல்லாம் இறந்துபோகும்படி செய்யவேண்டும்; அவன்மனைவி எப்பொழுதும் நீங்காத வியாதியிற் சிக்கி வருந்துமாறு செய்யவேண்டும்; அவனுடைய வேளாண்மைகளெல்லாம் நாசமாய்ப் போகும்படி செய்யவேண்டும்; அவனுக்கு எவ்வித வருமானமுமில்லாமற்போகுமாறு புரியவேண்டும்; அவன் எப்பொழுதும் துன்பஞ் சகிக்காமல் கண்கலங்கி நிற்கும்படி செய்தல் வேண்டும்; இவற்றையெல்லாம் நீ நிறைவேற்றினால் உனக்கு நான் ஆயிரந்தேங்காய் சிதறுகாயாக உடைக்கிறேன்; பஞ்சாமிர்த அபிஷேகம் செய்கிறேன்; பாற்பொங்க லிடுகிறேன்; மல்லிகைப்பூ மாலைகட்டிச் சாத்துகிறேன்" என்று தெய்வத்தினிடம் பிரார்த்தனை செய்துகொள்ளுகிறார்கள். அருள்வாரிதியாகிய கடவுள் இந்த மூடர் கோரிக்கையை நிறைவேற்றுவாரா? ஒருபோதுமில்லை. அந்த மனிதனுக்குப் பழவினைப்பயனால் அப்பொழுது சில கெடுதிகள் நேர்ந்துவிட்டால் மேற்கூறிய மூடர், தம் கோரிக்கையைக் கடவுள் நிறைவேற்றி விட்டாரென்று மகிழ்ந்து பிரார்த்தனைகளை உற்சாகத்துடன் செய்து முடித்துவிடுகிறார்கள்; அந்த மனிதனுக்குக் கெடுதியொன்றும் நேராவிடிலோ தெய்வம் தம் கோரிக்கையை நிறைவேற்றவில்லையென்று கோபங்கொண்டு, "அட பாழுந்தெய்வமே! உனக்கு நான் ஏதேதோ செய்வதாக வாக்களித்தேனே; என் கோரிக்கைப்படி நீ ஒன்றுமே செய்யாமற் போய்விட்டாயே; உன்கோவில் குட்டிச் சுவராய்ப்போக! கண்கெட்டபயல் தெய்வமே! உன்னைநான் கொண்டாடி வந்தேனே!" என்று அத்தெய்வத்தைத் திட்டுகிறார்கள்.

இன்னும் சில அறிவிலிகள், தங்கள் விரோதியின்மீது பொய் வழக்குத் தொடுத்து அதில் அவனுக்குத் தக்கதண்டனை கிடைத்துவிட்டால் தெய்வத்துக்குப் பலசிறப்புக்கள் நடத்துவதாகப் பிரார்த்தனைசெய்து கொள்ளுகிறார்கள். அந்தப்படி அவனுக்குத் தண்டனை கிடைத்தால் அக்கடவுளைக் கொண்டாடுகிறார்கள்.

மற்றுஞ் சில பேதைகள், பிறர்சொத்து தங்களுக்குச் சேரவேண்டுமென்று அநியாயவழக்குத்தொடுத்து அவ்வாறே அப்பொருள் கிடைக்கக் கோர்ட்டுத் தீர்ப்பானால் தெய்வத்துக்குத் தேங்காயுடைப்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்டு தாங்கள் விரும்பிய

படி பொருள் கிடைத்துவிட்டால் சொன்னபடி தேங்காயுடைக்கிறார்கள்; கிடைக்காவிட்டால் அக்கடவுளை நிந்திக்கிறார்கள்.

சில திருடர்கள், தாங்கள் திருடச்செல்லுமிடத்தில் பொருள் சுலபமாகக் கிடைத்துத் தாங்களும் பிறரிடம் பிடிபடாமல் வந்துவிட்டால் தெய்வத்துக்கு ஆடுவெட்டிப் பொங்கலிடுவதாகப் பிரதிக்ஞை செய்துகொண்டு திருடச் செல்கிறார்கள்; தாங்கள் கோரியவாறே காரியம் பலித்துவிட்டால் சொன்னபடி சுவாமிக்குப்பொங்கலிடுகிறார்கள்; பலிக்கா விட்டால் அத்தெய்வத்தைப் பழிக்கிறார்கள்.

கொலைத்தொழிலாளர் சிலர், வேட்டைக்குச் செல்லுங்காலத்தில், தங்களால் பல மிருகங்கள் கொல்லப்பட்டுத் தங்களுக்கு நல்லவேட்டை கிடைத்தால் இஷ்டதேவதைக்கு எருமைக்கடா பலிகொடுப்பதாக வாக்களித்துச் சென்று, நினைத்தபடி மிருகங்களின் கொலை நேர்ந்தால் தாங்கள் கூறியபடி பலி கொடுக்கிறார்கள்; வேட்டை கிடைக்காவிட்டால் குலதெய்வத்தைக் கோபித்து வைகிறார்கள்.

சில காமுகர்கள் உத்தமிகளாகிய சிலபெண்கள்மேல் இச்சைகொண்டு அவர்களின் சேர்க்கை தங்களுக்குக் கிடைத்தால் தெய்வத்துக்குப் பால் அபிஷேகம் செய்வதாகப் பிரார்த்தனைசெய்துகொள்ளுகிறார்கள், தங்கள் பிரார்த்தனைக் கிணங்க அவர்களின் சேர்க்கை ஏதோ ஒருவகைக் காரணத்தால் அகஸ்த்மாத்தாக ஏற்பட்டு விட்டால் சொன்னபடி சுவாமிக்குப் பால் அபிஷேகம் செய்கிறார்கள்; அவ்வாறு அவர்கள் சேர்க்கை கிட்டாவிட்டால் அக்கடவுளை அவமதித்துப் பேசுகிறார்கள்.

இன்னும் சில பொறாமைக்காரர்கள், சிலர் உயர்ந்தபதவியிலிருப்பதைப் பார்த்துச் சகிக்காமல், அவர்கள் கெட்டுத் தாங்கள் அந்நிலைமைக்கு வந்துவிட்டால் வழிபடுதேவதைக்கு மாவிளக்குப் போடுவதாகப் பிரார்த்தனை செய்துகொண்டு தங்கள் விருப்பம் எவ்வகைக் காரணத்தினாலாவது நிறைவேறி விட்டால் பிரார்த்தனையை வெகுபத்தியுடன் செய்து முடித்துவிடுகிறார்கள்; எண்ணம் பூர்த்தியாகாவிட்டால் அத்தேவதையை அளவுக்குமிஞ்சித் திட்டுகிறார்கள்.

எங்கேனும் ஒரு சம்ஸ்தானத்தில் ஒரு புலவர் செல்வாக்குடனிருந்தால் சில பொறாமைப் புலவர்கள் அவருடைய உயர்ந்தவாழ்வைப் பார்த்துச்சகியாமல் அப்புலவர்கெட்டொழிந்து அவருடைய நிலைமை தங்களுக்கு வந்துவிட்டால் கடவுளுக்குச் சர்க்கரைப் பொங்கல் செய்து படைப்பதாகப் பிரதிக்ஞை செய்துகொள்ளுகிறார்கள்; அப்புலவர் பழவினையால் கெட்டொழிந்து தங்களுக்கு அகஸ்த்மாத்தாக அந்த இடம்கிடைத்துவிட்டால் அவர்கள், வெகு

விமரிசையாகச் சர்க்கரைப் பொங்கல் செய்து அத்தெய்வத்துக்கு நிவேதனம் செய்கிறார்கள். தங்கள் எண்ணம் கைகூடாவிட்டால் அந்தத்தெய்வத்தை வாய்கடுக்கத் திட்டுகிறார்கள்.

பக்கத்துவீட்டுப் பெண்ணொருத்தி உயர்ந்த ஆடையாபரணங்களோடு வெளியேறுவதைக் காணும் சில பொறாமைக்குணமுள்ள பெண்கள், அந்தப்பெண் வறுமைப்பட்டு அவளுடைய உயர்ந்த நிலை தங்களுக்குக் கிடைக்கவேண்டுமென்றும், அவ்வாறு கிடைத்துவிட்டால், இஷ்டதேவதைக்குச் சுவர்ணாபிஷேகம் செய்வதாகவும் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறார்கள். தாங்கள் எண்ணியபடி அக்காரியங்கள் பலித்துவிட்டால் தெய்வ பிரார்த்தனையைச் சிரத்தையுடன் நிறைவேற்றுகிறார்கள்; பலிக்காவிட்டாலோ அத்தெய்வத்தைப் பழிக்கிறார்கள்.

இன்னும் இவைபோன்ற பல செயல்களையுடைய மூடர்கள் எத்தனையோ பேர்கள் இருக்கின்றனர். அவர்களையெல்லாம் விளக்குவதானால் மிகவிரிவெய்தும். இங்குக்கூறியபடி இவர்கள் கெடுதலுக்குக் கடவுள் பிரார்த்தனை செய்வதெல்லாம் உண்மை; ஜனங்களின் குணங்களையும் நடக்கைகளையும் கூர்ந்து கவனித்தால் உலகத்தில் இத்தகைய மனிதர் பலரிருப்பதைக் கண்கூடாகக்காணலாம். உலக இயலை நன்கு ஆராய்ந்துணராத கற்றறிமோழைகள் சிலர், 'இப்படிக் கடவுள் பிரார்த்தனை செய்யும் மனிதர்கள் கூட இருப்பார்களா? இது கட்டுக்கதை' என்று கண்மூடித் தனமாகப் பேசுவார்கள். இவர்கள் அறிஞருள்ளுஞ் சேராமல், மூடருள்ளும் சேராமல் இரண்டுங்கெட்ட இருள்மனத்தராவர்.

மேற்கூறியபடி கைக்கூலி கொடுத்துக் கடவுளிடம் கெட்ட வேலைவாங்க நினைக்கும் பலரை நாம் எங்கும் காண்கிறோம். இவர்களே மனிதருட்பதராவர்; விவேக சூனியர்களுமாவர்; உலகத்திற்குச் சுமைகளாய்த் தோன்றிய உற்பாதபிண்டங்களாவர்; கடவுள் இவர்களின் நோக்கப்படி தேங்காய் பழங்களுக்காகத் தீயகாரியங்களைச் செய்ய இவர்கள் வைத்த ஆளா? கடவுள் நலஞ்செய்தற்குரியவரேயன்றித் தீமைசெய்தற் குரியாரல்லர் என்பதை இந்த அறிவிலிகள் உணர்ந்தார்களில்லை. கடவுளை வேண்டி நற்கதியடைய வேண்டுமென்னும் எண்ணத்தை விடுத்து இவர்கள் இத்தீயகாரியங்களை நினைப்பதால் மீளாநரகிற் காளாவர். இவர்கள் நற்கதியடைய வேண்டுமானால் இத்தீய கொள்கையை யொழித்து நல்ல சிந்தனையுடன் கடவுளை வழிபடவேண்டும்; இவர்களுக்கு அறிஞர் அறிவுறுத்தவேண்டும். கடவுளுடைய உண்மைத் தத்துவத்தையும், அவரை வணங்கவேண்டிய கிரமங்களையும் இத்தகையினர் உணர்ந்துய்யும் மார்க்கங்களைத் தேடுவது அறிஞர்கடமையாம்.

ஓம் தத் ஸத்.

---




## ஆனந்த மோகன் போஸ்.

இந்து தேசீய எழுச்சிக்கே ஆரம்பகால ஆசிரியர்களாகவும், தேச காங்கிரஸ் மகா சபை இந்நிலையை எய்துதற்குப் பாத்தியஸ்தர்களாகவும் திகழ்ந்த பல தேசீயத் தலைவர்களுள் நாம் வரையப்புகுந்த இப்பெரியாருடைய தொண்டு, எவ்விதத்திலும் ஏனையோருடைய உழைப்பைவிடக் குறைந்த தாகக் கூறவியலாதது. இத்தகைய அவதார புருடர்கள் தோன்றி அவ்வப் பொழுது நாட்டின் பொது நன்மைக்கும், சமயக் கோட்பாடுகளுக்கும் மாறான கொள்கைகளை அரசாங்க இயலிற் பொருத்துதல் ஆகாதென மன்றாடி வேண்டி, தமது முறையீடுகள் ஜனசமூக சம்மதமானதென்பதை விளக்க காங்கிரஸ் மகாசபையை ஸ்தாபித்து, மேல் நாடெங்கும் மேன்மை யுற 'இந்தியா அறிவிற்கு ஆதாரமான பூமி; மகான்கள் தோன்றும் மாண்புடை அரங்க'மென்பதை மெய்ப்பித்திராவிடில் இன்று நாம் இத்துணை நலங்களைப் பெற்று வாழ வியலாதென்பதை அறியாதார் யார்? ஆதலின் ஆனந்தம் பயக்கும் ஆனந்த மோகன போஸ் சரிதையைச் சுருக்கி நமது ஆனந்தபோதினி யில் வரைவாம்.

**பிறப்பும் வித்தையும்**

ஆனந்த மோகனர் கீழ வங்காளத்தைச்சார்ந்த மைமன்சிங் என்ற மகிமை பொருந்திய பதியில் 1846-ம் ஆண்டில் அவதரித்தார்; கருத்துடன் கண்டதைக் கற்றுக் கல்கத்தா நகர பிரவேசப் பரீட்சையில் 1862-ம் ஆண்டில் முதல்தரமாணவராகத் தேர்ந்தார். இவருக்குச் சிறு பிராயம் முதல் இயற்கையாகப் பொருந்தியிருந்த தேசபக்தி, குருபக்தி, வித்தை விரும்புதல், பெரியாரைப்பேணல், தீயவை விலக்கல், மெய்யே பேசலாசிய பெருங் குணங்களைக்கண்ட பெற்றோர், பெரியார், ஆசிரியர், சுற்றத்தாராகிய அனைவரும் இவருடைய எதிர்கால நிகழ்ச்சியை ஏகோபிதமாகக் கணித்துவிட்டனர். இவருடைய பன்னிரண்டாம் பிராயத்தில் சிப்பாய்க் கலகம் நிகழ்ந்தது. வங்காள சர்வகலாசாலையில் மோகனர் சேர்ந்து தம் அறிவால் அனைவரும் தம்மை விரும்ப, எப். எ., பி. எ. பட்டங்களை விமரிசையுடன் பெற்றதுமன்றி 'ராய்ச் சண்ட் பிரிம்செண்ட்' (Roychand Premchand) என்ற 10,000 வெகுமதியையும் பெற்றார். கல்வியிலாகாவில் அக்காலத்தில் இவரைத் தெரிந்து கொள்ளாதவரில்லை. இவர் சில மாதங்கள் 'இஞ்சினீயரிங் காலேஜ்' கணித ஆசிரியராக விருந்தார். சீமைக்குச்சென்று சட்டப் பரீக்ஷையில் தேர்ந்து வரவேண்டுமென்ற எண்ணம் இப்பெரியாருக்கும் உதித்தமையால் இவர் அவ்வேலையை விட்டுவிட்டு 1870-ம் ஆண்டில் இங்கிலாந்துக்குச் சென்றார்.

அக்காலத்தில் ஹிந்துமதத்தின் சில அதிவைதீக மதக்கொள்கைகளை விலக்கி, இந்தியாவில் மேல்நாட்டு முறையில் ஓர் நவீன கொள்கையை மேற்கொண்ட ஹிந்துமதத்தை 'பிரம்ம சமாஜம்' என்ற பெயருடன் வேரூன்றச் செய்து, உலகத்தையே தம்முடைய சொற்பொழிவுகளாலும், அறிவின் வன்மையாலும் ஒரு ஆட்டு ஆட்டிவைத்த ஸ்ரீகேசப் சந்திர சேனர் போஸை

**சமயாசாரம் பிரம்மசமாஜம்.**

அந்தப் பிரம்ம சமாஜத்தில் சேர்த்து வைத்தார். அவர் பிரம்மசமாஜத்தைச் சார்ந்தாரானாலும் அதிவைதிக அனுஷ்டானங்களைக் கைவிடவில்லை; மதாசாரங்களை தீவிரமாக அப்யசித்து வந்தார். இந்தியாவின் இரத்தினங்களைக் கண்டால் மேல் நாட்டார் அடையும் மகிழ்ச்சிக்கு அளவேயிராதாதலின் இவருடைய சகல வசீகர சக்திபொருந்திய வதனத்திலும் வாய்மொழியிலும் ஈடுபட்ட மேல்நாட்டு அறிவாளிகள் இவருக்குச் சீமையில் பல சிறப்புகள் செய்தனர்; ஒருசமயம் இவரை நோக்கி, 'நாங்கள் சகல வித்தியா பண்டிதனான "கிளாட்சன்" (Gladstone) என்ற முதல் மந்திரிக்குப் பிறகு உங்களைத்தான் அந்த நிலையில் வைத்துப்புகழக் கூடியவராக மதித்திருக்கிறோம்' என்றார் ஓர் மேல்நாட்டு மேதாவியும். 'கேம்பிரிட்ஜ்' நகரக் கிறிஸ்து கலாசாலையிற் சேர்ந்து போஸ் கணித ஆராய்ச்சிகளில் வல்லுநராகிப் பின் சட்டதிட்டங்களில் பட்டமும் பெற்று 1874-ல் இந்தியாவுக்குத் திரும்பினார்.

**நியாய வாதத் தொழில்.**

மோகனர் கல்கத்தாவை அடைந்தவுடன் நியாயவாதத் தொழிலைத் தொடங்கினார். இவர் மனத்தில் அந்தரங்க தெய்வபக்தி யுடையவராதலால் அதில் அதிகப்பொருளீட்ட இவரால் இயலவில்லை. உண்மைக்கு மாறான விஷயங்களில் இவருடைய மனம் நாட்டங் கொள்ளாதாகையால் தாம் உண்மையென்று நிச்சயிக்கின்ற கக்ஷியையே சார்ந்து பேசி வந்தார். ஆனால் அவற்றில் இவருக்கு வெற்றி நிச்சயமாக இருந்துவந்தது. இவருக்கு எதிராகப்பேச அக்காலத்திய கலகத்தா பிரபல நியாயவாதிகளும் அஞ்சி நடுங்கினர். அத்தொழிலில் இவர் ஈட்டிய பொருளை யெல்லாம் அசாம் மாகாண உ விவசாய விருத்தியின் பொருட்டே செலவு செய்துவந்தார். பின்னர்ப் பல முகாந்தரங்களைக் கொண்டு இவர் நியாயவாதத் தொழிலைவிட்டு, இறைவன் தமக்குப் பரம்பரையாக அளித்துள்ள ஐஸ்வரியத்தைச் சத்விஷயத்தில் விநியோகஞ் செய்ய நினைத்து, மதசேவையிலும், ராஜீயத்திலும் நுழைந்து உழைக்க வாரம்பித்தார்.

**வித்யாபி விருத்தி.**

மேடைகளில் ரஞ்சிதமாகப் பேசுவதால் மட்டும் தேச விடுதலையோ நன்மையோ ஏற்பட்டு விடுமென்று இவர் நம்பவில்லை. விடுதலைக்கு முதற் காரணமாயுள்ளது கல்வியேயானதால், நம்முடைய தேசத்தில் கல்விப் பெருக்கு ஏற்பட்டால் மட்டுமே மக்கள் உணர் வடைவார்கள் என்றுணர்ந்து 1877-ல் கல்விச் சபையில் சீர்திருத்தத் தீர்மானங்கள் பலவற்றைச்செய்து சர்வ கலாசாலைச் சபையின் அங்கத்தினர் பதவியையேற்று உள்ளும் புறமும் உழைத்துவந்தார். "படிப்புக்கே பணத்தைக் கொட்டவேண்டு" மென்று இவர் பலத்த வாக்குவாதஞ் செய்து அரசாங்கத்தார் அதனை அங்கீகரிக்கச் செய்துவிட்டார். 1880-ஆண்டில் இவர் நகரக் கலாசாலை என்ற பெயருடன் ஓர் பாடசாலையை ஸ்தாபித்து நடைபெறச் செய்தார். அக்கலாசாலை இன்று வங்காளத்தில் கல்விச் செங்கோலோச்சி வருகின்றது. பெண் கல்வியை மோகனர் பெருமையுடன் விரும்பினார். ஆடவசமூகம் அறிவாளிகளாவதற்கு அடிப்படையாயிருப்பது அன்னைமார்களுக்குப் போதிக்கப்படும் கல்வியே யாதலின் அதன் பெருக்கை அவர் பெரிதும் விரும்பினார். ஆதலால் 1881-ம் வருடத்தில் 'வங்க மகில வித்யாலய' மென்ற பெயருடன் ஓர் பெண் கலாசாலை வங்காளத்திற்கே முதற் பெண்பாடசாலையாக ஏற்படுத்தப்பட்டது.

(தொடரும்) **ஸ்ரீலக்ஷ்மீ காந்தன்.**






## வேதாந்த சார சங்கிரக வசனம்.

(303-ம் பக்கத் தொடர்ச்சி)

முன்னர்க் கூறியபடி தீனனாகத் தன்னெதிரில் வணங்கி நிற்கும் சீடனைக் கருணையோடு நோக்கி,

குரு:—(பயப்படாதே எனப் பலமுறை கூறி அபயமளித்து) புத்திரா! நீ மரணத்தினிடத்துக் கொண்டிருக்கும் பயத்தை விட்டுவிடு. உனக்கு மரணம் இல்லவேயில்லை. ஏனெனில் நீ நித்தியன் (அழிவில்லாதவன்); பேதமில்லாதவன்; பரமானந்த வடிவினன்; நீ பிரம்ம சொரூபி. ஆகையால் உனக்கு மரணமில்லை. இங்ஙனமாக, நீ பிராந்தியால் (மயக்கத்தால்) எதையோ பார்த்து பயமடைந்த மனத்தையுடையவனாய் அவாஸ்தவத்தை (உண்மையல்லாத வார்த்தையைக்) கூறுகிறாய். கனவில் எதையோ பார்த்துப் பயந்து 'என்னைக் காப்பாற்று' என்று கூக்குரலிடுகின்றவனுடைய வார்த்தை எப்படி உண்மையல்லவோ அப்படியே உன்வார்த்தையு முண்மையானதல்ல; அசத்தியமேயாகும். நன்றாகத் தூங்கிக் கொண்டிருக்குமொருவன் கனவில் தன்னைப் பாம்பு கடித்து விட்டதாகக் கண்டு, 'ஐயோ! நான் செத்தேன், செத்தேன்' எனக் கத்துகிறான். அப்போது அருகிலிருந்த வொருவன் அவனைத் தட்டி யெழுப்பி, 'என்னடா! என் கத்துகிறாய்?' என்று கேட்டால், அவன் என்னபதில் சொல்லுவான். 'ஒன்றுமில்லை' யென்பான். அப்படியானால் அவன் முன்பு, 'நான்செத்தேன்' என்று சொன்னதற்கு அர்த்தமென்ன? அது வெறும் வார்த்தையே யல்லவா? அன்றியும், தரையில் கிடக்கும் ஒரு கயிற்றை ஒருவன் கயிறு என்றறியாமல் பாம்பென்று கருதி, 'இதோ! பாம்பு!! பாம்பு!!!' என்று அஞ்ஞானத்தால் (உண்மையையறியாமையால்) கத்துகிறான்; பயப்படுகிறான்; நடுங்குகிறான். அவன் சொன்னவார்த்தை நிஜமா? மித்தையேயன்றோ! விசாரிக்குமிடத்து அங்கு சர்ப்பம் இல்லையன்றோ?

சற்சீடனே! இப்பொழுது காட்டின திருஷ்டாந்தத்தில் சொப்பனாவத்தையில் கண்ட சர்ப்பமென்னும் பயமும், சாக்கிராவத்தையிற் கண்ட சர்ப்பப்பிராந்தியும் எப்படி மித்தை (பொய்) யோ அப்படியே உனக்கு ஜனனம் மரணம் வியாதி முதலான துக்கங்களிருப்பதாக நீ கூறுவதும் மித்தையேயாகும். இத்துக்கங்களெல்லாம் உன்னுடைய பிரமையால் நீ கற்பித்துக் கொண்டவையேயாகும். (கற்பிதம் என்பது இல்லாததை உண்டெனக் கொள்ளுதல்.) தீரவிசாரிக்குமிடத்து இந்த விஷயம் நன்கு விளங்கும். ஆகையால் ஆத்மாவின் விஷயமாக நீ கொண்டிருக்கும் இப்பயத்தை விட்டுவிடு.

சீடன்:—குருநாதா! தாங்கள் கூறிய திருஷ்டாந்தம் பொருத்தமானதாகக் காணப்படவில்லை. ஏனெனில் அப்பாம்பு பிராந்தியாலுண்டானமையின் மித்தையே யென்பது உண்மையாம். நான் சொன்ன வார்த்தையும் அதைப்போலவே பிராந்தி கற்பித மெப்படியாகுமென்பது அடியேனுக்கு விளங்கவில்லை. அதைத் தயைகூர்ந்து திருவாய்மலர்ந்தருள வேண்டும்.

குரு:—சீடனே! நீ சச்சிதானந்த வடிவினன். இத்தகைய நீ அசத்து ஜடதுக்க வடிவினதான சரீரத்தின் தர்மங்க (குணங்க)ளாகிய ஜனன மர

ணுதிகளை உன்னிடத்திலிருப்பனவாக ஆரோபித்துக் (கற்பித்துக்) கொண்டு நான் வியாதியுடையவன்; நான் மரணமடைவேன் என்றெண்ணித் துக்கிக்கிறாய். உனது எதார்த்த சொரூபத்தை அறிந்து கொள்ளாமையாகிய அஞ்ஞானத்தால் உனக்கு இவ்வித பயமானது உண்டாயிற்றேயன்றி வாஸ்தவமாக அவைகள் உனக்கில்லை. ஆகையால் நீ கொண்டிருக்கும் இந்த பயத்தைவிட்டு உனதெதார்த்த சொரூபத்தையறிந்து சுக சொரூபியாயிரு.

(ஆரோபம்-அத்தியாசம்-கற்பனை (பிராந்தி) என்பன ஒரு பொருட்சொற்கள். ஒரு வஸ்துவினிடத்து வேறொரு வஸ்துவை யுணர்தல் இதன் இலக்கணம். கயிற்றினிடத்துப் பாம்பு தோன்றுதல்-கட்டையினிடத்துக் கள்ளன் தோன்றுதல்-கானலில் நீர் தோன்றுதல் முதலியன இதற்குத் திருஷ்டாந்தங்களாம்,

ஆரோப மத்தி யாசம் கற்பனை யாவ வெல்லாம்
ஓரோர்வத் துவினில் வேறே யோரோர்வத் துவினை யோர்தல்
நாரொடு பணியாய்த் தோன்றல் நரனுகித் தறியிற் றோன்றல்
நீரொடு கானல் தோன்றல் நிறந்தலம் வெளியிற் றோன்றல்.

என்னும் கைவல்ய நவநீதச் செய்யுளும் ஈண்டறியத் தக்கதாம்.)

சீடன்:—சுவாமி ஜனன மரணாதிகள் சத்தியமல்ல; மித்தையேயாம் என்று கூறினீர்கள். அதற்குச் சொப்பன சர்ப்பத்தையும் கயிற்றரவையும் திருஷ்டாந்தமாகக் காட்டினீர்கள். கனவிற் கடித்ததும் பிராந்தியால் காணப்பட்டதுமாகிய பாம்பு நிஜமல்லவென்பது யுக்தமே. ஆனால் நான் அனுபவிக்கும் ஜன்மம் ஜரை வியாதி மரணம் என்னு மிவைகள் சத்தியமல்லவெனக் கூறுவது எப்படிப் பொருந்தும்! ஏனெனில், உண்மையல்லாத (பொய்யான) பாம்பு, கனுக்கண்டவனுக்கும் பிராந்தி யடைந்தவனுக்கும் மாத்திரமே காணப்பட்டதே யல்லாமல் மற்றவர்களுக்குக் காணப்படவில்லை. நானனுபவிக்கும் ஜனனமரணாதிகளோ எல்லோர்க்கும் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்றனவே. ஆகையால் இவை எப்படி மித்தையாகும்? பிரத்தியட்சப் பிரமாணமாக அனுபவிக்கப்படும் வஸ்து எங்ஙனம் மித்தையாகும்? கண்ணிற்குத் தோன்றுகிற குடத்தை எப்படி அசத்தியமென்றெண்ணுவேன்! குருநாதா! உள்ள வஸ்துவிற்கு மித்தியாத்தன்மை எப்படிச் சம்பவிக்கும்? எல்லாப் பிரமாணங்களினும் பிரத்தியட்சப் பிரமாணமே சிறந்ததாகும். ஏனெனில், அதுவே (அர்த்தத்தை ஸ்பஷ்டமாகப் போதிப்பதாகும்) பொருளை நன்கு விளக்குவதாகும்.

(பிரமையின் கரணம் பிரமாணம்; பிரமை=பிரமாணத்தாலுண்டாகும் ஞானம். கரணம் என்பது சிறந்த காரணம். ஆகவே பிரமாணத்தாலுண்டாகும் ஞானத்திற்குச் சிறந்த காரணமாயிருப்பது பிரமாணம் எனப்படும். பிரத்தியட்சப் பிரமாணம்:—பிரத்தியட்சப் பிரமையின் கரணம் பிரத்தியட்சப் பிரமாணமாம். குடம் முதலியவற்றைக் காணுமிடத்து நேத்திரம் (கண்) முதலிய இந்திரியங்கள் பிரத்தியட்சப் பிரமாணம். இது குடம்என்று அறியுமிடத்து நேத்திரேந்திரியப் பிரமாணம். கடம் பிரமேயம். அதன் ஞானம் பிரமை.

பிரமாணங்கள்:-பிரத்தியட்சம்-அனுமானம்-உவமானம்-சப்தம் என நான்கென்றும், இவற்றோடு அருத்தாபத்தி - அனுபலப்தி என்னும் இரண்டையும் கூட்டி ஆறென்றும் கூறுவர். இவற்றுள் பிரத்தியட்சமே பிரபலப்பிரமாணமாம். அங்ஙனமாக, அத்தகைய பிரத்தியட்சத்தால் காணப்படும் வஸ்து எங்ஙனம் மித்தையாகும் என்று சங்கித்துச் சீடன் இவ்வாறு கூறி மேலும் கேட்கிறான்.)

பகவானே! நீங்கள் என்னைப் பார்த்து 'நீ பிரம்மஸ்வரூபி; அழிவற்றவன்; பரமானந்த வடிவினன் எனக் கூறினீர்களே! மனிதனும் பிறப்பு இறப்பு முதலிய துக்கங்களையுடையவனும் அற்ப ஆயுளுள்ளவனுமாகிய நான் எப்படி பிரம்ம சொரூபியாவேன்! சாசுவதத்துவமும் பரமானந்த ரூபத்துவமும் எனக்கு எப்படிச் சம்பவிக்கும்! ஆத்மவஸ்து எது? அனாத்மவஸ்து எது? ஆத்ம அனாத்மாக்களின் லக்ஷணமென்ன? ஆத்மவஸ்துவினிடத்தில் அனாத்மவஸ்துக்களின் ஆரோபம் எப்படி உண்டாகிறது? அஞ்ஞானமென்றுலென்ன? அந்த அஞ்ஞானத்தாலுண்டான பயத்தை விடுவதெப்படி? ஞானமென்றுலென்ன? அந்த ஞானத்தாலுண்டாகும் சுகத்தை அடைவதெப்படி? கிருபாசாகரராகிய சுவாமி! இவையிற்றையெல்லாம் அடியேனுக்கு நன்கு விளங்குமாறு தெரிவிக்க வேண்டுகிறேன்.

### மித்தியாத்துவ நிரூபணம்.

குரு:—அன்புள்ள மகனே! நான் மனுஷன் என்று நீசொன்னுயல்லவா! அந்த மனுஷத்தன்மை உன்னிடத்தில் இல்லை; பிராந்தியினுல் கற்பிக்கப் பட்டதே யாகும். ஜன்மஜரா வியாதி முதலானவைகளும் கற்பனையே. ஆகையால், உனக்குண்டாவதாக நீ கூறும் துக்கமும் கற்பிதமேயன்றி வாஸ்தவமன்று. ஆகவே மித்தையேயாம். தூக்கத்திலுண்டாகும் அஞ்ஞானத்தால் காணப்படும் சுகதுக்கங்கள் விழித்துக் கொண்டபின் உனக்குக் காணப்படுவதில்லையே. அதுபோலவே, உனக்கு ஞானமுண்டான பிறகு இத்துக்கங்களும் காணப்படமாட்டா.

எல்லோராலும் பிரத்தியட்சமாக அனுபவிக்கப் படுகின்ற பிரபஞ்சமெல்லாம் எப்படி மித்தையாகும் என்றும், பிரத்தியட்சமே பிரபலபிரமாணமென்றும் கூறினை. நீ விசாரணையில்லாமையால் மோகமடைந்தவனுய் இவ்வாறு கேட்டனை. இப்பொழுது நான் கேட்கும் கேள்விக்கு நன்றாய் யோசித்து விடைகூறு பார்ப்போம்.

கோட்டான் என்னும் பறவையின் கண்ணிற்குப் பகற்காலமானது இருண்டதாகப் பிரத்தியட்சமாய்க் காணப்பட்டாலும் அந்த இருள் உண்மையாகுமா? ஆகாதல்லவா! அவ்வாறே பிராந்தியால் (அஞ்ஞான மயக்கத்தால்) பார்க்கப்படும் வஸ்துவானது பிராந்தியுள்ளவனுக்கு உண்மையானதாகவும்' பிராந்தியில்லாதவனுக்கு மித்தையானதாகவும் காணப்படும். இது குடம் என்னுமிடத்துக் குடம் என்னும் பெயரையுடைய ஒரு பொருள் பிரத்தியட்சமாய்க் கண்ணிற்குப் புலனுகின்றது. அதை விசாரிக்குமிடத்து அந்தக் குடம் இல்லவேயில்லை. ஆனுல் அங்கிருப்பது அந்தக் குடத்தினும் வேறுன லக்ஷணமுடைய மண்ணேயாகும். மேலும், சூரியன் இப்பூமியைவிட மிகப் பெரிதாக இருக்கிறதென்று சாஸ்திரம் கூறுகின்றது. அத்தகைய சூரியன் நமது கண்ணிற்கு உள்ளங்கை யளவினதாக இருப்பதாய்க் காணப்படுகின்றது. இவ்விரண்டில் எது உண்மை? பிரத்தியட்சப் பிரமாணம் உண்மையா! நன்றாக யோசித்துப்பார். பிரத்தியட்சப் பிரமாணம் என்னவாயிற்று! பிரத்தியட்சமே பிரபலமானதென்னும் வியவஸ்தையுள்ளதா! இல்லை. ஆகையால், இந்த ஜனன மரணுதிகள் உன்னிடத்தில் பிராந்தியால் காணப்பட்டனவாதலின் மித்தையேயன்றி உண்மையல்லவெனத் தெரிந்துகொள். நீ ஆனந்தவடிவாகிய பிரம்மமாயிருக்கிறுய். உன்னைக்காட்டிலும் அன்னியமாகாத (வேறுகாத) பிரம்மத்தை உன் சித்தத்தில் (புத்தியில்) தேடுவாயாக.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாஸன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

# ஆலயங்களில் நடக்கும் அக்கிரமங்கள்.

சென்னையில் கூடிய 42-வது அகில இந்திய காங்கிரஸ் மகாசபைக்கு நானும், வேறு சிலரும் வந்து திரும்பும்போது சில ஸ்தலங்களுக்கு தரிசனார்த்தமாகச் சென்றிருந்தோம். சில இடங்களில் ஆலயங்களில் உள்ள வர்கள் பூசாகைங்கரியங்களிலும் இதர நற்காரியங்களிலும் சில அக்கிரமங்கள் செய்து வருகிறார்கள். சுவாமி தரிசனத்திற்கு கண்டிஷன் செய்து காசு வாங்குகிறார்கள். இவற்றை நாங்கள் நேரில் பார்த்ததால் எங்களுக்குண்டான மனக்கவலைக் களவில்லை. ஆதலின் இவ்விஷயத்தை ஆனந்த போதினிக்கு எழுதலானேன்.

காங்கிரஸ் முடிந்ததும் நாங்கள் திரும்பிவரும் மார்க்கத்தில் திருக்கழுக் குன்றில் தங்கிச் சுவாமி தரிசனத்துக்கு மலைவாயிலில் ஏறினோம். அப்போது அங்கு பெருஞ் சத்தம் உண்டாகிக்கொண்டிருந்தது. அதைக் கவனித்த தில் மலைக்குப் போகும் ஜனங்கள் அங்கிருக்கும் காவலனிடம் உண்டியல் பணம் செலுத்திவிட்டுத்தான் போகவேண்டுமென்று செய்திருந்த ஏற்பாட்டி னால் அந்த இரைச்சல் உண்டாயிற்றென்பது விளங்கிற்று. உண்டியலில் செலுத்தும் தொகை சிறிதாதலால் எல்லா ஜனங்களும் செலுத்திவிட்டுச் சென்றார்கள். பின்னர் நாங்கள் மலைமேல் ஏறிச் சென்றோம். அங்கே சுவாமி தரிசனம் செய்தபிறகு பக்ஷி தரிசனம் செய்வதற்காக, மலையின் ஓர் பாகத்தில் திரளாக ஜனங்கள் கூடியிருந்தார்கள். ஷை பக்ஷி தரிசன விவரம் புராணத் தில் உயர்வாகவே சொல்லியிருக்கிறது. அதை நாம் இங்கு விரித்துரைக்க வேண்டியதில்லை. காலை 11-மணிக்கு ஆதிசைவரென்ற பண்டாரக்குருக்கள் ஒருவர் பக்ஷிகளுக்கு வழக்கம்போல தம் கையால் சாதம் கொடுத்தார்.

மீதிச்சாதத்தை வியாபாரம் செய்யத்தொடங்கி ஷை யார் அதற்கெனக் கட்டியிருக்கும் சிறிய மண்டபத்திலேறி,

பக்ஷி தரிசனம், பாப விமோசனம்; அதிலும் தீர்த்தம், பிரசாதம் உட்கொண்டால் பிறவிப்பிணியே ஒழிந்துவிடும் என்று பிரசங்கித்ததோடு நபர் 1-க்கு ரூ. 1-4-0 கொடுத்து (நெல்லுக்காய்ப் பிரமாணமுள்ள) பிர சாதத்தை வாங்கிக்கொள்ளச் சொல்லினர். அவ்வாறு சொல்லியபின் ரூபாய் கொடுத்தவர்களுக்கு முதலில் பிரசாதம் கொடுக்கப்பட்டது. ரூபாய் கொடு த்து வாங்கிக்கொள்ள சக்தியற்றவர்கள் பிரசாதம் கிடையாத பாபத்தைக் கைக்கொண்டு மனவருத்தத்தோடு திரும்பினர். சிறிதுநேரம் சென்றபின் ரூ. 0-8-0. 0-4-0. 0-2-0. செலுத்தியாவது, பிரசாதம் வாங்கும்படி ஷையா ரால் உத்தரவிடப்பட்டது. அப்போதும் சிலர் வாங்கியும், வாங்காமலும் சென்றனர்.

2-வது, கிரயம் கொடுத்தவர்களுக்குப் பிரசாதம் ஓர் கழற்காய்ப் பிர மாணம்தான் கொடுக்கப்பட்டது. இம்மாதிரி வியாபாரம் எங்கும் காண முடியாது. பிரசாதம் 1-படி அரிசிப் பொங்கல் இருக்கலாம். ஏறக்குறைய அதன் கிரயம் ரூ. 2-0-0 ஆகும். விற்றுமுதல் குறைந்த பக்ஷம் ரூ. 30-0-0 இருக்கும். இம்மாதிரி வியாபாரம் தினம் நடந்துகொண் டிருப்பதாகத் தெரிகிறது.

முடிவில் இதைக் கவனித்துக்கொண்டிருந்த நாங்கள் ஷையாரிடம், "பிர சாதம் வாங்க அபேக்ஷித்த அனேக ஏழை ஜனங்கள், வருத்தத்தோடு திரும் பச்செய்த, தாங்கள் ஒரு சிறியதொகையை அவர்களிடம் வாங்கிக்கொண்டு

எல்லாருக்கும் பிரசாதம் கிடைக்கச்செய்யக்கூடாதா?'' என்று கேட்டோம். அதற்கவர் மகா விசனத்தோடு, "எனக்கு ஒருவர் சம்பளம் கொடுக்கவுமில்லை நான் ஊழியக்காரனுமில்லை; பிரசாதம் வாங்கியவர்கள் அந்தப் பலனடைவார்கள்; எல்லாரும் அடைந்துவிட முடியாது'' என்று ஏதேதோ ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத வார்த்தைகளைப் பேசிமுடித்துவிட்டு ஜனங்களெல்லாம்போய் வியாபாரக் கிராக்கி குறைந்து அவர் பிரசாதம் விற்கமுடியாத அச்சமயத்தி லிருந்தவர்களாகிய எங்களுக்கு இனமாகப் பிரசாதங் கொடுத்தார்.

ஆனால், எண்ணிலா ஜனங்கள் பிரசாதம் வாங்கமுடியாமல், திரும்பியதைப்பார்த்த எங்களுக்கு அதைவாங்கிப் பிறவிப்பிணியை மாற்றிக்கொள்வதற்குச் சிறிதும் இஷ்டமுண்டாகவில்லை. முன் திருப்பதி வாயில் காப்போன் விஷயமும், வேறு பல விஷயங்களும், நம தானந்தபோதினி மூலம் கண்டிக்கப்பட்டிருந்தும் இன்னும் இப்பேர்ப்பட்ட ஸ்தலங்களில் இம்மாதிரி செய்து, ஜனங்களை இம்சிப்பது ஈஸ்வர திருப்தியாகுமா?

இன்னும் எங்கள் பிரயாணத்தில் இம்மாதிரியே சில ஆலயங்களில் அக்கிரமங்கள் நடைபெற்றன. அவற்றை யெல்லாம் எழுதுவதானால் மிக விரிவெய்தும். ஆதலின் அவற்றுள் ஒரு முக்கிய விஷயத்தைமட்டும் சொல்லி நிறுத்திக்கொள்கிறேன்.

நாங்கள் திருவாரூருக்குச்சென்று ஆலயமடைந்து அம்பிகைக்கு அஷ்டோத்திர அர்ச்சனை நடத்திவைக்கும்படி ஒரு பட்டரைக் கேட்டுக்கொண்டோம். அவர் அர்ச்சனை செய்ய ஆரம்பித்தார். அடியேன் சாஸ்திரத்திலுள்ளபடி அர்ச்சனையை மனதில் நினைத்து, தியானம்செய்து எண்ணிவந்தேன். அவர் 50-எண்கள் வரை, அர்ச்சனை சொல்லிப் பூர்த்திசெய்து எங்களுக்குப் பிரசாதமும் கொடுத்து, அர்ச்சனைக்கு ரூ 0-5-9 கேட்டார். "அர்ச்சனை பூர்த்தியாகவில்லையே; இவ்விதம் செய்வது முறையா?'' என்று நான் அவரைக் கேட்க, அவர், "அதனால் ஏற்படும் பாபம் எனக்கு'' என்றும், "அணா குறைவின்றிக் கொடுத்துவிடவேண்டும்'' என்றும் சொல்லினர்.

இவர் மனோதைரிய மெப்படி இருக்கிறது? இவர்களுக்குப் பகவத் ஆராதனைசெய்ய இடங்கிடைத்ததுதான் ஆச்சரியம்! இனியேனும் ஆலயங்களில் அக்கிரமங்கள் நடக்காமலிருக்க அறிஞர் முயற்சிசெய்யவேண்டும்.

மு. சோமசுந்தரம்பிள்ளை.

**குறிப்பு:**—இத்தகைய அக்கிரமங்களைப்பற்றிக் கண்டித்து நம் போதினியில் பல வியாசங்கள் வந்திருக்கின்றன. எனினும் இவை குறைந்தபாடில்லை. ஸ்ரீரங்கத்தில் வைகுண்ட ஏகாதசி சமயத்தில் உற்சவர் மோகினி அவதாரத்துடன் வரும்போது முதற்சமயத்தில் அக்கோலத்தைத் தரிசிப்பார்க்கு 8-அணா கட்டணமும், இரண்டாம் சமயம் காண்பார்க்கு 6 அணா கட்டணமும், மூலவரின் முத்தங்கி சேவைக்கு 1-ரூபா கட்டணமும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. மேற்கூறிய கட்டணங்கள் செலுத்தியவர்கள்தாம் ஷை கோலங்களைத் தரிசிக்கலாம். எனினும் அவர்களும் சரிவரத் தரிசிக்க முடிவதில்லை; போலீஸ்காரரின் நெருக்கடியால் படாதபாடும் படுகின்றனர். மற்றையர்க்கோ ஒரு தரிசனமும் எட்டுவதில்லை. சில உத்தியோகஸ்தர்களும், பார்ப்பனமாக்கள் எல்லோரும் தாராளமாக ஒரு பைசாவும் செலுத்தாமல் உட்சென்று சுவாமி தரிசனம் செய்கின்றனர். எல்லோருக்கும் பொதுவான தேவாலயங்களில் இத்தகைய ஓரச்செயல்கள் நடைபெறுவது கூடாது. இதனை தர்மஸ்தாபனகமிட்டியார் அவசியம் கவனித்து ஒரு தக்க ஏற்பாடு செய்தல் வேண்டும். ப-ர்.

# பூர்வகால நாடகங்கள்.

(272-ம் பக்கத் தொடர்ச்சி.)

நாடகங்கள் நடைபெறுகின்ற காலங்களில் வானம் வழங்குவது வழக்கமாயிருக்க, வந்த மேகமும் இந்நாடகங்களைக்கண்டு பயந்து இரண்டொரு மின்னலிடிகளுடன் அகன்றுவிடுகின்றது. சிலர் அந்தரங்க விஷயங்களை அரங்கிற்கு ஏற்றதாயனுசரித்து வருகின்றனர். இத்தகைய நாடகங்களைக் காண நாம் நாடகக் கொட்டகையில் ஆடுகளைப்போல அடைக்கப்பட்டுக்கிடந்து 'காசைக் கொடுத்துத் தேள் கொட்டுப்பட்ட' கதைபோல் பயனற்ற விஷயங்களிற் பணத்தை வீணே செலவிடுகின்றோம்; செலவிடுவது அங்குள்ள நாற்றத்தைச் சுவாசிக்கவா? அல்லது நல்ல சங்கீதத்தைக் கேட்டு ரஸிக்கவா? அன்றி அதனால் ஏதாவது அரிய பயனை எவ்வழியிலாவது அடைகின்றோ மென்பதாலா? அன்பர்களே! சற்று ஆலோசித்துப்பாருங்கள்.

நாடகங்கள் நிகழ்த்தப்படுவதின் நல்ல கருத்துக்களென்ன! நாடகம் நல்வழியிலே மக்களைப் புகுத்திப் பக்தியூட்டும் பான்மைத்தன்றோ! 'நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து' என்றார் மாணிக்கவாசகர். நாடகமாவது இதனின்றும் எத்துணைத் தத்துவசார சம்பத்தாக இருக்கின்ற தென்பதை நாம் நன்கு கண்டு தெரியலாம். நாடகத்தைக் குறிப்பாலுணர்த்தி 'சதுரங்க சேனையுடனே வந்ததோர் வாழ்வுமோ ரிந்திரஜாலக்கோலம்' என்றார் பிறரும். நாடகமே முற்காலத்தில் மொழிகளின் இலக்கண இலக்கியங்களுக்கும், வேதாந்த ஆத்மவிசாரங்களுக்கும் தக்க உபமானப்பிரமாணமாக எடுத்தாளப் பெற்றுளது. நவரஸங்கள் பொங்கவேண்டிய நாடகாலங்காரங்களில் பவரஸம் பாங்குடன் விளங்குவதென்னை ?

தமிழ்நாட்டின் பண்டைச் சிறப்பமைந்த நாடகங்களோடு அவற்றுடனிணைந்து நிற்கும் நாட்டியமும் இப்போது தாழ்வடைந்தது. நாட்டியமில்லா விழாவும், மங்கல நிகழ்ச்சிகளும் முற்காலங்களிலின்றாம். அவற்றை வலியுறுத்தும் நூல்களும் இப்போது இலாது போயின. பரதநாட்டிய சாத்திரங்களைப் பயின்று பாங்குடன் விளங்கிய மாதர் குழாமும், அக்கலைகுன்றி, விலைமாதுத் தொழிலே மிகுந்து, ஆடல்பாடல்களை முறைப்படி யியற்றவறியாதாராயினர். இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் 'ஸ்ரீமத் அருணாசலக் கவிராயரவர்கள் இராமநாடகமொன்றை யியற்றினார்; அதுவே தற்போழ்து தமிழ்நாடகக்காதை நூல்களிற் சிறந்துவிளங்குகின்றது. அந்நூலில் அப்பெரியார் அந்நாடகம் (பொதுவில் நாடகங்கள்) தெருக்கள் கூடுகின்ற இடங்களிலே நடிக்கப்படவேண்டுமென்று குறிப்பித்தல் காணத்தக்கதாம். நிற்க,

நிகழ்ச்சியில், தமிழர் நலத்திற்கு மாறானதும், உண்மைக்கும், உறுதி பயக்கும்முறைகளுக்கும் ஒரு சிறிது மொவ்வாததுமான சில நாடகங்கள் பிற்காலத்தவரா லியற்றப்பெற்றுள்ளன. அவற்றை யியற்றிய ஆசிரியர்களின் கருத்தையோ, புகழையோ, நூலையோ நாம் குறைபடுத்திக்கூற ஈண்டுத் துணியவில்லை. ஆனால் அந்நாடகங்கள் மேனாட்டு நாகரீக நாடகமுறைகளைப்பற்றிச் செல்லுகின்றமையால் அன்னோர் பண்டைத் தமிழ்நாட்டு நாடகாலங்காரத்தை ஆதரிக்கவில்லை யென்பதை மட்டுஞ் சுட்டுகின்றோம். இக்காலத்தில் பெரும்பாலும் நிகழும் நாடகங்கள் அரிச்சந்திரவிலாசம், லலிதாங்கி, டம்பாச்சாரி, நல்லதங்காள், கோவலன் என்பனவே. இவற்றைத் தவிர, சில அசம்பாவிதமான 'நிர்வாணத்துடன் தைலமுழுக்காட்டல்' என்ற

கேவலமான நிகழ்ச்சிகளைக்கொண்ட பல நாடகங்களும் நிகழ்கின்றன. மேலே குறிப்பிட்ட சரித்திரசம்பந்தமான நாடகங்களும் பண்டைமுறைக்கேற்றவையாயில்லை. இதனாற்றான் நிகழ்கால நாடகங்களை யிகழ நேரிடுகின்றது; அவற்றைக் காண்பதால் ஆடவரும் பெண்டிரும் ஒழுக்கங்குன்றவும் நேரிடுமெனக்கூற மனந்துணிகின்றது. பல நாடகங்கள் முதல் நூலார் கருத்தினைத் திருத்தியும், சிற்சிலவிடங்களில் மறைத்தும் நடாத்தப்படுகின்றன. இவற்றால் சாமானியர் செவிகளும் கண்களுங் களித்து, மனவெழுச்சியில்லாது திரும்புகின்றனர். அறிவாளிகள் ஒருபயனுமின்றி, விழிப்பால் கண்வலியும், அமர்ந்திருந்ததால் உடல் வலியும், கண்காட்சியால் மனக்கலக்கமுமடைந்து குளிக்கப்போய்ச் சேற்றைவாரிப் பூசிக்கொண்டவர் போலத் திரும்புகின்றனர்.

"நாடகம் தத்துவார்த்தம் ததும்பியது. நடிப்பவர் உண்மையில் கதாநாயக நாயகியரல்லாவிடினும் அன்னவரைப்போன்றே அவர்கள் மெய்ம்மறந்து நடிக்கின்றனர். பக்தி குடிகொண்ட அவர்கள் மனம் பரமானந்தமடைகின்றது. 'பிரகலாதன்' என்ற சரித்திரத்தில், சிறுவன் தன்னை மறந்து தானே பிரகலாதனாகிக் கதறுகின்றான். கருணைத்தடங்கடலான கடவுள் கண்ணெதிர்ப்படுகின்றார். அந்த நரசிம்ம வேடதாரி ஆவேசமடைகின்றான். நாடகத்தைக் காண்பார் மனம் லயப்படுகின்றது. நாடகத்தைக்கண்ட பலர் பாண்டுரங்க பக்தர்களாயினரென, பக்தவிஜயத்தில் கூறப்படுவதே இதன் பெருமையை விளக்கச் சாலும். நாடகத்தைப் பார்ப்பவன் அதில் ஒருவனுடைய பொருளை மற்றொருவன் அபகரிப்பதைக் காண்கின்றான்; மனவெழுச்சி யடைகின்றான். நாடக அரங்கத்தினின்றும் வெளிப்பட்டவுடன் அதே மனநிலை நடிகர்களுக்காவது அல்லது நாடகத்தைப் பார்த்தவர்களுக்காவது இருப்பதில்லை. அந்த நாடகத்திற்கண்ட நிகழ்ச்சி உண்மையில் நிகழுமாயின் அம்மனிதன் எண்ணொணாக் கோபத்தை யடைகின்றான்; கொந்தளிக்கின்றான். நாடகமும், உண்மையும் ஒன்றாகிவிட்டால் உண்மையான இறைவனருள் அவனுக்குச் சித்திக்கின்றது. இதுவே நாடகத்தின் தத்துவம்" என்ற வடமொழி ஐரோப்பிய நிபுணர் மார்க்க மூலரின் அபிப்பிராயமிங்குக் குறிப்பிடத்தக்கது.

ஆனால் சில குழாத்தினர் பழங்கால நாடக நிகழ்ச்சிகளைச் சில அம்சங்களிலாதரித்து, சிறிது சிறிதாக மாற்றி வருகின்றனர். அவர்களுள் யாம் கண்டவரையில் சென்னை அரசாங்க உத்தியோக சபையார் (Madras Secretariate Party) திருச்சி (ரயில்வே) ரசிக ரஞ்சன சபையார், சென்னை வி. கன்னையா அவர்களின் ஸ்ரீ கிருஷ்ணவிநோதசபை ஆகிய இம்மூன்று குழாத்தினரையுங் குறிப்பிடலாம். பழந் தமிழ்நாட்டுச் சரித்திர சம்பந்தமான சோழ, சேர, பாண்டியர் அரசாட்சியில் நடந்த நிகழ்ச்சிகளை நாடகமாக அமைத்துத்தரும்படி மேலே குறிப்பிட்ட திருச்சி ரஸிக ரஞ்சன சபைக் காரியதரிசி உயர்திரு. எப், ஜி. நடேசய்யரவர்கள் பன்முறை அடியேனைத் தூண்டி வருகின்றார்கள். இதனால் இவர்களுக்கு ஊக்கமும், பழயனவிரும்பும் மனவெழுச்சியு மேற்பட்டிருக்கின்றனவென்பது நன்குவிளங்கும். பலரும் பழயனவிரும்பி அவற்றின் சில அம்சங்களைப் புகுத்தி வருகின்றனர். எதற்கும் உரிய பருவமொன்று வேண்டுமன்றோ!

இவற்றான் 'பூர்வகால நாடகங்களின் சிறப்பை அடியேன் இயன்றவரை எடுத்தெழுதியதோடு இக்கட்டுரையைப் பூர்த்திசெய்கிறேன்.

**துக்துடநகர், ஆத்மநாதன்.**

குறிப்பு:—நண்பர் எழுதிய இவ்வியாசத்தால் நாடகத்தின் இயற்கை, பயன், பூர்வகாலநிலே, தற்காலநிலே முதலியவற்றை நன்குணர்ந்து கொள்ளலாம். எனினும் இக்காலத்தில் நடக்கும் நாடகங்களிற் காணப்படும் ஒழுங்கீனங்களில் இன்னும் சிலவற்றையும், அவற்றை அகற்றி நாடகத்தை நல்ல விதத்தில் அமைக்கும் மார்க்கங்களேயும் எழுதுவது அவசியமாகக் காணப்படுகின்றமையின் அவற்றையும் சிறிது விளக்குவாம். நாம் பண்டைய தமிழ் நூற்களே ஆராயும்போது தமிழ்ப் புலமையிலும், சங்கீதத் தேர்ச்சியிலும் மிக்க வித்வான்களாலே சிறந்த பாடல்களாலும், அழகிய சொற்கட்டுகளமைந்த வசனங்களாலும் நாடகங்கள் இயற்றப்பட்டு நடிகர்களுக்குப் பயிற்றப்பட்டும், அவர்களேக் கொண்டு நடத்துவிக்கப்பட்டும் வந்தனவென்பதும், நாடகம் கதை தழுவியதென்றும், கதை தழுவாததென்றும் இருபிரிவுகளேயுடையதாயிருந்ததென்பதும், அவற்றுள் கதை தழுவியது கீர்த்தி பெற்றவர்களுடைய சரித்திரங்களே நடித்துக் காண்பிப்பதென்பதும், கதை தழுவாதது, தனிப் பாடல்களேப் பாடி அதிலுள்ள கருத்துக்களுக்குத் தக்கபடி அபிநயம் செய்வதென்பதும், அது நிருத்த மாதர்களால் ஆடப்படும் பரதநாட்டியமென்பதும், கதை தழுவிய நாடகம் பெரும்பான்மையும் ஆடவர்களாலும், சிறுபான்மை பெண்களாலும் நடத்தப் படுமென்பதும், நாடக அரங்குகள் உயர்ந்த பல இலக்ஷணங்களுடனும், திரைகளுடனும் அமைந்திருந்தனவென்பதும், நடிகர்கள், தாங்கள் எந்தக் கதாநாயகரின் வேடந்தரிக்கிறார்களோ அந்த வேடத்திற்குத்தக்க தேக அமைப்பும் குரலும் உடையவர்களாயிருந்து வந்தார்களென்பதும், பிறவும் விளங்குகின்றன. இவற்றுட் சில முக்கியமான பகுதிகளெல்லாம் சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலிய நூல்களிலும் காணக் கிடக்கின்றன. மதுரைத் திருமலே நாய்க்கர் மாலில் இருந்த நாடக அரங்கு இப்பொழுதும் விளங்கிக்கொண்டிருக்கிறது. இன்னும் சில புகழாளர், தாங்கள் உயிருடனிருக்கும்போதே தங்கள் சரித்திரங்களேத் தங்கள் கண் முன்பாகவே நடிகர்களேக் கொண்டு நடிப்பித்துப் பார்த்து மகிழ்ந்திருக்கிறார்களென்பதும் விளங்குகின்றது. இவ்வாறு அக்காலத்தில் நாடகம் நடத்தியவர்கள், விரும்பிய அவ்வப்போது நினைத்த சரித்திரங்களே நாடகங்களாக இயற்றி நடத்திவருவது வழக்கமாதலின் அவை கையெழுத்துப் பிரதிகளாக அத்தொழிலாளர்களிடத்து மாத்திரம் இருந்துவந்து பிற்காலத்தில் ஆதரிப்பாரின்மையால் அவற்றுள் சில மறைந்தொழிந்தன; சில மாத்திரம் அச்சிடப்பட்டு வழங்கி வருகின்றன. ஆனால் அவைகளே இக்காலத்தில் போற்றுவாரின்மையால், சில வியபாரிகள் வழுக்கள் நிறைந்தனவாக அச்சிட்டு வெளியிட்டு வருகின்றார்கள்.

மேற்கூறிய முறைகளே அனுசரித்தே சுமார் முப்பது ஆண்டுகட்கு முன் வரை அறிஞர்களால் நாடகங்கள் நடத்தப்பட்டு வந்தன. அவர்கள், நகரங்களில் நாடக மேடைகளிலும், கிராமங்களில் தெருக்களிலும் நாடகங்களே நடத்தி வந்தார்கள். அவர்கள் நாடகம் நடத்தி வந்ததில் அமைந்திருந்த மகிமை அளவிட்டுச் சொல்லி முடியாது. வேடத்திற்குத் தகுந்த உடைகளே

அணிவார்கள்; ஒரு வேடத்திற்கு எத்தகைய தேக அமைப்பும், எவ்வளவு வயதும், எப்பேர்ப்பட்ட தொனியும் அமைந்திருக்க வேண்டுமோ அவைக ளெல்லாம் அமைந்தவர்களே அவ்வேடத்தைத் தரிப்பார்கள்; நடிக்குங் காலத்தில் நவரசங்களையும் உள்ளபடியே காட்டுவார்கள்; கூடியவரை கல்வித் தேர்ச்சியுடனும், சங்கீதத் தேர்ச்சியுடனும் பாடல்களை வழுவின்றியும், சுருதி, லயத்தோடு பொருத்தியும் பாடுவார்கள்; வசனங்களைச் சரித்திரங்களுக்குத் தகுந்த பொருத்தத்துடனும், அழகுடனும் பேசுவார்கள். ஒரு ஆட்டக்காரர் துரிதக்காலத்தில் பாட்டுப்பாடி ஆடும்போதும் அவருடைய பாட்டும், ஆட்டமும், கைத்தாளமும், சுருதியும், இராகமும் அணுவளவும் விகற்பப் படாமல் மிகவும் ஒற்றுமையா யிருக்கும். முக்கிய ஆக்டர்கள் சோபரசத்தைக் காண் பிக்கும்போது ஜனங்களெல்லோரும் கண்ணீர் வடித்தழுவார்கள். வீரரசத் தைக் காட்டும்போது நடுங்குவார்கள். இப்படி ஒவ்வொரு ரசத்தைக் காட் டும்போதும் ஜனங்கள் அது அதற்குத்தக்க உணர்ச்சிகளை அடைந்து அவற் றின் வயப்பட்டுப் போவார்கள். தெருக்கூத்தாடிய சிவசாமி யென்பவர் சந் திரமதியாகவே வேடந்தரித்துச் சோபரசம் பாடும்போது கண்ணீர் விட்டழா மல் எவருமே இராரென்பதைத் தமிழ் நாடு முழுவது முணரும். இன்னும் அவர் நாடகத்திற் காட்டிய அற்புத மகிமைகளை மதுரை, இராமநாதபுரம் ஜில்லாக்களில் வயதுசென்ற மனிதர்களிடம் கேட்டுணர்ந்து கொள்ளலாம். இவ்வாறே நாடக மேடைகளில் டிராமா ஆடி வந்தவர்களுள்ளும் சுந்தரராவ், கலியாணராமய்யர், சுப்பராய ஆச்சாரியார், நாராயணசாமிபிள்ளை முதலியவர் கள்நாடகத்தில் காட்டிவந்த அற்புத மகிமைகள் அளவிடற்கரியனவாம். அவர் கள் சோபரசம் நடத்தும் சமயங்களில் ஜனக்கூட்டமானது பேச்சின்றி ஸ்தம்பித்துச் சுத்தப் பிரம்மம்போல் அந்தச் சோபத்தில் லயமாகிவிடும். அக்காலத்திலிருந்த மற்ற சில்லறை ஆக்டர்களும் தங்கள் தங்கள் வேடங் களுக்குத் தகுந்த அற்புதச் செயல்களையே காட்டுவர்; கலியாண ராமய்யர் நாடகக் கம்பெனியிலிருந்த இராக்ஷத பார்ட் இராமசாமி ஐயர் இராக்ஷஸனாக வேடந்தரித்து வருங்காலத்தில் கொட்டகையே அதிர்ந்துவிடும். அவருடைய செய்கையைக் கண்டு, அதிக தைரியமுள்ளவரும் அஞ்சுவார்கள். திருவாளர். தஞ்சை. கோவிந்தசாமி ராவ் முதலிய உயர்ந்த நாடக ஆசிரியர்களிருந்து நாடகங்களை இவ்வாறு சரியான முறையில் நடத்தி வந்தார்கள்.

இத்தகைய நாடகமானது இக்காலத்தில் அடைந்திருக்கும் சீர்கேட்டை அளவிட்டுச் சொல்லுதல் முடியாது. தமிழிலும், சங்கீதத்திலும், நாடக இயலி லும் சரியான தேர்ச்சியில்லாத சில சிறுவர்களும், மற்றையரும் எங்கும் நாடக ஆசிரியர்களாகத் தோன்றியிருக்கிறார்கள். அவ்விதமே கல்வியறிவில்லாத ஆண்மக்களும் பெண்மக்களும் நடிகர்களாக வெளிப்பட்டிருக்கிறார்கள். இவர்களால் புண்ணிய சரித்திரங்களெல்லாம் சின்னபின்னமாக்கப் படுகின் றன. அவற்றுட் சில நடத்தப்படாமல் ஒதுக்கப் பட்டிருக்கின்றன. ஆபாச மான சரித்திரங்களே நடத்தப்படுகின்றன. எதுகை, மோனை, தளை முதலிய இலக்கண அமைதியும், பொருட் பொருத்தமும் இல்லாத பாடல்களே மிகுதி

யாகப் பாடப் படுகின்றன. இடத்திற்குப் பொருந்தாத வர்ணமெட்டுகளில் பாட்டுக்கள் அமைக்கப்படுகின்றன; உயர்ந்த இராஜபார்ட்காரரால் நரிக் குறவர் பாடும் ஒருவகை ஆபாச வர்ணமெட்டுப் பாட்டுக்கள் பாடப் படுகின் றன; தாழ்ந்த வேடந்தரிப்பவரால் உயர்ந்த இராஜ பார்ட்டுக்குரிய சிறந்த வர்ணமெட்டுப் பாட்டுக்கள் பாடப் படுகின்றன; துக்க சம்பவத்தில் வீரரசத் திற்குரிய வர்ணமெட்டுக்கள் பாடப் படுகின்றன; பாட்டுக்கள் பெரும்பான் மையும் சுருதியையும் தாளத்தையும் விட்டுப் பாடப்படுகின்றன; தாளத்திற் குச்சிறிதும் பொருத்தமில்லாமல் ஆட்டங்கள் ஆடப்படுகின்றன; சரித்திரங் கள் ஒழுங்கு தவறியும் தொடர்ச்சியின்றியும் இடையில் தேசியப் பாடல்களை யும் வேறு பல நாடகத்திற்குப் பொருந்தமற்ற சில்லறைப் பாடல்களையும் மிகுதியாகப் பாடி நடத்தப்படுகின்றன; சரித்திரத்திற்குப் பொருந்தாத வழுக்கள் நிறைந்த அதிகப் பிரசங்கங்கள் செய்யப் படுகின்றன; ஆண்களும் பெண்களும் எதிர்த்து நின்று பிறர் காதிறற் கேட்கத்தகாத காதல் ஆபாச மொழிகளை வெளிப்படையாகப் பேசிக் கண்ணால் பார்க்கத்தகாத விதத் தில் இடுப்பைவளைத்து இருவருடைய முன்பாகமும் ஒன்று சேரும்படி முன்னே நீட்டியும் பின்னே இழுத்தும் ஒருவகை மூடத்தனமான அநாகரீக ஆட்டத்தை ஆடுகிறார்கள். இவ்வித ஆபாச ஆட்டங்கள் வரும் சரித்திரங் களில் விடியும்வரை இந்தப் போக்கிரித்தனமான ஆட்டங்களே அந்த அவி வேக ஆக்டர்களால் நடைபெறுகின்றன. வேடத்திற்குப் பொருந்தாத உடை கள் அணியப்படுகின்றன; துக்கத்தைக் காட்டும் ஆக்டர்கள் ஆடம்பரமான உடையையும், சந்தோஷத்தைக் காட்டும் நடிகர்கள் துக்க உடையையும் அணிகிறார்கள். ஒரு வேடத்திற்குத் தகுதியற்ற தேக அமைப்புள்ளவர்கள் அந்த வேடத்தைத் தரிக்கிறார்கள்; முப்பது வயதுள்ள ஒருவன் வேடத்தை ஒரு சிறுவனோ அல்லது கிழவனோ தரிக்கிறான்; பெரிய ஒரு இராக்ஷதனுடைய வேடத்தை மெலிந்த தேகமும் ஒடுங்கிய குரலுமுள்ள ஒரு கிழவனோ அல் லது சிறு பையனோ தரிக்கிறான். இவர்களிடத்தில் அந்த அந்த வேடத்திற் குரிய செய்கை சிறிதும் நிகழ்வதில்லை. சிலர் நாடக இயலுக்கு முற்றும் விரோதமாகச் சிறுவர்களையே எல்லா வேடங்களையும் தரிக்கச்செய்து பாய்ஸ் கம்பெனிகள் நடத்துகிறார்கள். சிலர் பெண்களையே எல்லா வேடங்களையுந் தரிக்கச்செய்து மடவார் கம்பெனி நடத்துகிறார்கள். சிறுவர் நடத்தும் நாடகங்களும், ஆபாசப் பேச்சுக்களுடன் பெண்கள் நடத்தும் நாடகங்களும் இனிமையா யிருக்கின்றனவென்று நாடக இலக்ஷணமுணராத பாமர ஜனங்கள் அத்தகைய நாடகங்களைப் பார்க்க மிகுதியாகக் கூடுகின்றார்கள்; அதனால் சிறுவர் பாய்ஸ் கம்பெனிகளும், மடவார் நாடகக் கம்பெனிகளும் சாஸ்திர விரோதமாக அதிகரித்து வருகின்றன; இவற்றை நடத்துவோர் தங்களுடைய முறைகேடான நடக்கையை யுணராமல் எங்களுக்கு மிஞ்சி நாடகம் நடத்துவோரில்லை யென்று செருக்கித் திரிகின்றனர். சில விதூஷக ஆக்டர்கள் நாடகத்திற்குத் தலைவராயிருந்து கொண்டு நாடக முழுவதையும் விகட மயமாகவே நடத்துகின்றனர்.

*

இன்னும் இவர்கள் நடத்தும் ஆபாசங்கள் எவ்வளவோ உள; அவை விரிக்கிற் பெருகும். இவர்கள் உயர்ந்த படிப்பாளிகளை மதிப்பதில்லை. அவர்களைக்கொண்டு நாடகம் நடத்த நினைப்பதுமில்லை. அதனால் உண்மைத் தொழிலாளர்க்கும் உயர்ந்த படிப்பாளர்க்கும் மதிப்பே யில்லாமற் போய் விட்டது. இவர்களுக்குப் பண்டைக் காலத்துச் செருக்கூத்தாடிகளின் வல்லமைகளில் ஆயிரத்திலொருபங்கும் இல்லாதிருந்தும், அவர்களிடமிருந்த சில கருநாடகக் கொள்கைகளை இவர்கள் எடுத்துக்காட்டி அவர்களைப் பரிகசிக்கின்றனர்; அவர்களுடைய தாளக்கட்டில் ஆயிரத்திலொரு அம்சங்கூட இவர்களிடத்தில் இருப்பதில்லை. இவர்கள் ஆட்டம் ஒருபக்கமும், தாளம் ஒரு பக்கமும், பாட்டொரு பக்கமும் இருக்கின்றன.

இவர்கள் ஒருபக்கமிருக்க, ஆங்கிலங்கற்ற சிலரும், ஸ்கூல்களில் அறைகுறையான தமிழ் முதலியன கற்ற பலரும், "நாடகங்கள் சீர்கெட்டுப் போயின; நாங்கள் நாடக இயலுணர்ந்தவர்களாதலின் அவற்றைச் சரியான விதத்தில் நடத்திக் காண்பிப்போம்" என்று வெளியேறிப் பல நாடக சபைகளை ஸ்தாபித்து, மேல்நாட்டு முறைகளையும் பூரணமாக அனுசரியாமல், தமிழ் நாட்டு முறைகளையும் போற்றாமல் இரண்டுங் கெட்டதனமாக அவற்றிற் கொஞ்சமும், இவற்றிற் கொஞ்சமும் எடுத்துக்கொண்டு சிலர் பாட்டுக்களைச் சேர்க்காமலும், சிலர் பாட்டுக்களைச் சேர்த்தும், அவ்வாறு சேர்க்கும் பாடல்களையும் சுருதிலயம்விட்டுப் பாடியும், சரித்திரங்களை மாற்றியும் மனம் போனபடியெல்லாம் நாடகமாடி வருகின்றனர். தாங்களே நாடக இயல் முற்றுமுணர்ந்த மேதாவிகளைப்போல், பண்டைய தமிழ் நூற்களை ஆராய்ந்து அவற்றி னுட்பொருள்களை யுணராமல் பண்டைய தமிழ் நாடக முறை சரியில்லை யென்றும், தமிழில் நாடகத்திற்கே ஆதாரமான நூல் இல்லையென்றும் எதை யெதையோ எழுதியும் பேசியும் வருகின்றார்கள். இன்னும் சிலர், நாடகங்களைச் சீர்ப்படுத்த முன் வந்தவர்களைப்போல் வெளியேறி இப்போது யாரால் நாடகம் கெட்டு வருகின்றதோ அவர்களையே துணை சேர்த்துக் கொண்டு ஏதேதோ சில காரியங்களைச் செய்துகொண்டும், பத்திரிகைகளுக்கு வியாசமெழுதிக் கொண்டும் வருகின்றனர். சிலர், இப்போது நடக்கும் நாடகங்களின் ஆபாசங்களைக் கண்டிக்காமல், நாடகப் பெண்களும், ஆண்களும் தங்களை மதிக்கவேண்டி அவர்களைப் புகழ்ந்தெழுதுகிறார்கள். யாரேனும் இந்த நாடகச் சீர்கேட்டைக் கண்டித்தெழுதினும், அவர்களைப் பழித்தெழுதி அவமானப்படுத்தி விடுகிறார்கள்.

இப்படிப் பலவகையாராலும் நாடகம் கெடுக்கப்பட்டு வருவதால், அதனாலுண்டாகும் நன்மைக்குப் பதிலாகத் தீமையே உண்டாகி வருகின்றது. மொழி, இசை, நாடக முதலியவற்றின் இயற்கைகள் மிகுதியும் கெட்டு வருகின்றன. அறிஞர் நாடகங்களை வெறுத்து வருகின்றனர். வரவர நாடகங்களின் செல்வாக்கும் குறைந்து வருகின்றது. இந்நாடகத்தை நன்னிலைமைக்குக் கொண்டு வந்தால் மாத்திரமே நம்நாடு சிறப்படையும். உயர்ந்த படிப்பாளிகளின் துணையைக்கொண்டு நாடகம் நடத்தப்பட்டால் மாத்திரம் நன்னிலைமைக்கு வரும்; எனினும் இத்தகைய விஷயத்தை அதிகார வரம்புக்குட் படுத்திச் சீர்ப்படுத்தத் தக்க தமிழ்நாட்டரசின்மையாலும், பெரியோரை மதிக்காமல் ஒவ்வொருவரும் தாம்தாமே பெரியோரென மதித்துக் கொண்டிருப்பதாலும் அது முடியாத காரியமா யிருக்கிறது. ஒருகாலத்தில் தெய்வமே இதை ஒழுங்குசெய்யும். அறிஞர்க்கு நினைப்பூட்டவே இதை எழுதினோம்.

ப-ர்.





(307-ம் பக்கத் தொடர்ச்சி.)

## சமாதி.

**வா**யு, மனம், விந்து இவற்றை ஜயிக்காதவன் ஒருபோதும் ஞானத்தை அடையமாட்டான். ஞானத்தை அடையாதபோது முத்தி அடைவது மில்லையாம். ஆதலால் பிராணாயாமத்தால் வாயுவை அடக்கி மனதை அசையாமல் நிறுத்தவேண்டும். இவ்வாறு நிறுத்துவது கன்ம முதலியவற்றால் முடியாதாம். முத்தியை அடைய விரும்புகிறவன் எல்லாவற்றையும் ஒழித்துவிட்டுச் சற்குருவை அடைந்து சேவைசெய்து முறைப்படி உபதேசம் பெற்றுக் கசடறத்தெளிந்து யோக முயற்சியால் சமாதிகூடி ஞானத்தில் நிலைத்து முத்தியை அடையவேண்டும் என்பது யோகநூலோர் கருத்து.

இந்த யோக அப்பியாசத்துக்கு அநந்தம் இடையூறுகளுண்டாகும். அவை மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென்கிற மூவாசைகள், பரிமளசுகந்தபிரியம், அறுசுவையுண்டி தின்பண்டங்களில் விருப்பம், மக்கள் துணைவர் சிநேகர் முதலியவர், அதிகாரப்பிரியம், கோபம் பொறாமை அகங்காரம், கீதம் இசை முதலியன, ஆடல் பாடல் நாடகம்பார்த்தல் வேறுவகையான விநோதங்களைப் பார்ப்பதிலாசை, காமியகர்மங்களைச் செய்வதில் பிரியம், பூஜையாதி கர்மங்களும் யாகயக்ஞாதிகளும், முப்பத்திரண்டு வகையான தர்மங்களைச்செய்ய விரும்புதல், சயனசுகம், புண்ணியதீர்த்த க்ஷேத்திர யாத்திரைசெய்யப் பிரியப்படுதல், யானை குதிரை வண்டிகளிலேறிச் சவாரி போதல், இவைபோல்வன பிறவுமாம். பக்திசெய்ய விரும்புதலும் ஆலயதரிசன விருப்பங்களும் யோகத்துக்குப் பிரதிபந்தங்களா மென்பர் யோகநூலோர். இவைகளெல்லாம் யோக விக்கினங்களாமென்பது மெய்யேயாம். இவைகளைப் பற்றற ஒழித்தாலன்றி யோகநிலை மேவுதல் கூடாததாம்.

வீட்டு நூலோர் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னப்படும் நான்கும் மோட்சகாரணங்களாம். இவற்றுள் ஞானமே முக்கிய காரணமாம். சரியை இன்றிக் கிரியை இல்லை; கிரியையின்றி யோகமில்லை; யோகமின்றி ஞானமில்லை; ஞானமின்றி மோட்சமில்லை யாதலால் மோட்சத்துக்குச் சரியையாதி நான்கும் முறையே காரணங்களாம். இந்த நான்கு பாதங்களையும் கிரமமாய் அனுஷ்டிக்கிறவனே மோக்ஷத்தை அடைவான் என்பது வேதாகமாதிநூல்களின் கருத்தாதலால் யோகத்தாலும் பயனில்லை, ஞானமே சிறந்தது என்பர். ஆசனங்களாலும் வாயுவை அடக்குவதாலும் மோட்சம்பெற முயல்வதும், கழைக் கூத்தாடிகளின் ஜீவனோபாய முயற்சிபோல்வதேயா மென்பர். ஆயினும் மோட்சத்துக்கு ஞானமே முக்கிய சாதனமென்பது

இருவர்க்கு மொப்ப முடிந்ததாதலால் ஞானம்சிறந்த சாதனமென்பதுவே பொருத்தமுடையது.

வாசியோகத்தையன்றி மோட்சத்துக்கு வேறு காரணங்களில்லையென்றால் குருலிங்க சங்கமபக்திகளால் முக்தியடையலாமென்கிற நூல்களும், பக்திஞானங்களை விசேஷித்துக் கூறும் இதிகாசபுராணங்களும், கர்மத்தால் ஞானம்பெற்று மோட்சம்பெறலா மென்கிற ஸ்மிருதிநூல்களும் வியர்த்தமாகும். வைணவத்திற் கூறப்படும் பக்தவிஜயம் முதலியவும் வீணுவதன்றியும் பொய்யென்றும் கூறநேரிடும். சைவநூலாகிய தொண்டர் புராணத்திற் கூறப்படும் பக்தர்களுள் முக்தி அடைந்ததும் பொய்யென்று கூறநேரிடும். ஜனங்கள் நன்மை யடையும்பொருட்டு ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகமென்று மூன்று மோட்சசாதனங்களை நான் கூறினேன் என்ற பகவானுகிய கண்ணன் வாக்கியத்துக்கும் விரோதமாகும். இவற்றுக்கெல்லாம். மாருக யோகமே மோட்சசாதனமாம், ஏனைய வுபாயங்களால் பயனில்லையென்று யோகநூல் கூறியதை எவ்வாறு ஒப்பலாம் ? அதற்கு நியாயம் வேண்டுமென்பது அன்னோர் கருத்தாகும். அதை நாமும் சற்று விசாரிக்கவேண்டியதே.

எந்நூலார்க்கும் ஞானமே முத்திசாதனமாமென்பது ஒவ்வுதலாம். பகவானும் அதுகருத்தாதல் கீதையிற் காணலாம். கர்மமும் பக்தியும் ஞானங்கமாய்நின்று ஞானமளித்து முத்திதருவனவாம். தானமோ நேரில் தானே தருமியல்புள்ளது. இந்த ஞானத்துக்கு ஏனைய அங்கங்களாம். அதுபற்றியே சரியை, கிரியை, யோகம் ஞானமெனச் சைவநூல் வகுத்துக் கூறியது. இதனுல் யோகமும் ஞானங்கமாகவே கொள்ளப்படும். நிச்சலமாகிய மெய்ஞ்ஞானம் பெறும்வரைக்கும் யோகமும் வேண்டியதேயாம். இதுவன்றி மோட்சம் பெறுவதற்கு யோகம்தான் காரணமென்பதை யோகநூலும் ஒப்பவில்லை. அது பிராணுயாமாதிகளால் சித்தநிலைத்துநிற்பதே முக்திகாரணமாம் என்று யோகநூல் கூறுதலால் பெறலாம். யோகக்கழற்றியென்று ஒழிவிலொடுக்கங் கூறியது. அது யோகத்தையும் விடவேண்டு மென்பதாம். யோகத்தாலன்றிச் சித்தத்தைச் சலியாமற் நிற்கச்செய்யும் உபாயம் வேறில்லையென்பதே யோகநூலின் கருத்தாம். சித்தம் நிலைத்துநிற்பதே ஞானமாம். அதன் வாயிலாக ஞானத்தையும் முக்தியையும் அடையக்கூடுமென்பதேயதன் கருத்துமாம்.

யோகத்துக்குக் கூறப்பட்ட எட்டு அங்கங்களுள் இயமநியமாதிகளில் கர்மயோக பக்திகளும் அடங்கும். ஆசையை ஒழித்தலாகிய கர்மயோகம் சர்வசித்திகளையும் தரும் என்பது நிச்சயம். இதனுலேயே, "கன்மத்தால் ஞானமுண்டாம்" என்று பிரமாணநூல்கள் கூறுகின்றன. கன்மம் காமியமென்றும், நிஷ்காமியம் என்றும் இருவகைப்படும். காமியகன்மமாவது ஒரு பிரயோசனத்தை விரும்பிச் செய்யப்படுங் கன்மம். இது விரும்பிய பலனைக் கொடுத்து ஒழிவதாம். நிஷ்காமியம் அங்ஙனமின்றி மன ஒழிவை யுண்டாக்கி மோட்சகாரணமாகிய ஞானத்தைக் கொடுத்து மோக்ஷ ஹேதுவாய் நிற்பது.

இதனையே கண்ணபிரான் கீதைவாயிலாக அர்ஜுனனுக்கு உபதேசித்தருளினார். அது கர்மதியாகம் (கர்மத்தைவிடுதல்) என்பதே. கன்மத்தைச் செய்யாமலே விட்டுவிடுதல் கன்மத்தியாகமாகாதென்றும், அங்ஙனம் விடுகிறவன் பதிதனாவான் என்றும், வைதிக நூல்களிற் கூறப்பட்டுள்ள கன்மத்தைச் செய்தே தீரவேண்டுமென்றும், செய்த கன்மத்தின் பலனை விடவேண்டுமென்றும், இதுவே கன்மத்தியாகமாமென்றும் உபதேசித்தருளினார். கன்மபலனை விடுதலாவது செய்த கன்மபலனைத் தான் விரும்பாமல் ஈசுவரார்ப்பணம் செய்தலாமென்றும் கூறி, "ஏ அர்ஜுனா! வைதிககன்மங்களைச் செய்; அதன் பலனை எனக்கு அர்ப்பணம் செய்துவிடு" என்று கூறினார். இப்படிச் செய்யப்படும் கன்மமும் மோட்சகாரணமாமென்பது பகவான் அபிப்பிராயம். கன்மத்தைச் செய்யும்போது பொறாமை, குரோதம் முதலிய துர்க்குணங்களை ஒழித்தே செய்யவேண்டும்.

இயமம், நியமம், சரியை, கிரியை, கர்மம், பக்தி என்பன எல்லாம் ஒன்றேயாம். என்றால் இயமநியமங்களும், கன்மபக்திகளும் சரியை கிரியைகளுள் அடங்கும். அதனாலேதான் யோகநூல்களும் சரியா யோகம், கிரியா யோகம் என்று அவற்றைப் புகழ்ந்து கூறின. இந்தக் கிரியா யோகத்தில் கர்மயோகமும் அடங்கும். ஆதலால் கண்ணன் கூறிய கர்மயோக பக்தி யோகங்களை யோகநூல் நிந்திக்கவில்லை. ஒப்பியே கூறின.

கர்மத்தை ஸ்மிருதிநூல்கள் விரித்துக்கூறின. அவை கிருச்சிரம் சாந்திராயணம் முதலிய விரதங்களாம். இந்த விரதங்களே தபசு என்னப்படும். விரதங்களால் சரீரம் தபிக்கப்படுகிறபடி (உலர்த்தப்படுகிறபடி) யால் அது தபம் தபசு என்னப்படும். இந்தத் தவங்களால் தபிக்கப்பட்ட சரீரம் நிர்மலமாம். நிர்மலமான சித்தத்தில் தெய்வம் விளங்கும். அந்தத் தெய்வத்தைச் சிரவண மனன தியானங்களால் வழிபடுவதே பக்தியாம்.

சிரவணமாவது வேதாந்தாதிநூல்களையும், பக்தியைவிளக்கும் ஸ்துதி ரூபமான பாடல்களையும் கேட்குதலாம். மனனம் என்பது கேட்டவற்றைச் சிந்தித்துத் தெளிதலாம். தியானமென்பது தெளிவடைந்தபின் அப்பொருளினிடத்தில் மனதைச்செலுத்தி இடையறாமல் (மறவாமல்) நினைத்துக்கொண்டிருப்பதாம். இந்தத் தியானமே பின் சமாதி ஞானமாகும். சகுணப்பொருளைச் சிந்திப்பதனால் மனங்கரைந்துருகி அப்பொருளோடு ஒன்றுபடுவதேயாம். சமாதியால் ஒன்றுபட்டபின் சகுணத்தையும் மறந்து நிர்க்குண பிரம்மமயமாக நிற்பதே மெய்ஞ்ஞானமாம். அதுவே முத்தியுமாம். இவனையே ஜீவன் முக்தனென்று முன் சமாதிஞானத்தில் கூறப்பட்டது. இயமநியமங்களில் கர்மயோக பக்தி யோகங்கள் அடங்கியிருத்தலால் யோகநூல் கண்ணபிரான் வசனத்தோடு கூறியதில்லையென்றுணர்க. அன்றியும் இதிகாச புராணாதி நூல்களுக்கு மாறாகக் கூறியதில்லையென்றறிக. இதனால் நிஷ்காமிய கர்மமும் நிச்சலபக்தியும் மோட்சசாதனங்களாமென்பது விளங்கும். ஆதலால் கர்மநூல்களும், யோகநூல்களும், ஞானநூல்களும் ஒருபொருளையே விளக்கு

வனவாம். இதனுலேயே வேதாந்தஞான முணர்ந்த பெரியோர்கள் பிராணு யாமாதிகளால் பிரயாசைப்படாமல் மனதை அடக்குதலே மோட்சஹேது வாம்; மனமடங்கும் என்பர். இது ஞானவாசிஷ்டம் முதலிய நூல்களில் விளக் கப்பட்டிருக்கின்றது. பிரகலாதர் பக்தியால் மனமடங்கிச் சிலையைப்போல இருந்தாரென்று ஞானவாசிஷ்டம் கூறியது காண்க.

இந்திரியங்களால் மனது நிலைதிரியுமென்பது யாவருக்கும் ஒவ்வுதலாம். மனமடங்குதலே ஞானமாம். இந்திரியங்கள் விஷயப் பொருள்களில் மனதை இழுக்கின்றன. இந்திரியங்களை அடக்குவதே மனவடக்கமாகும். அதற்கு ஆசையை ஒழிப்பதே கருவியாம். பஞ்சஇந்திரியங்களாலும் விரும்பப் படும் விருப்பத்தை ஒழிக்கவேண்டும். இவற்றுள் பொருள்களைக் கவரும் கண்களையும், சுவையை விரும்பும் நாவையும் முதலில் அடக்கவேண்டும். இவ் விரண்டையும் முயற்சியால் அடக்கிக்கொண்டால் மற்றவற்றை எளிதில் அடக்கலாம். இந்திரியங்களில் மனம் செல்லாமலிருந்தால் மனம் அசையா மல் நிற்கும். மனம் ஒன்றைப்பற்றியே நிற்கும் இயல்புடையதாதலால் அது உபாசிக்கப்படும் சகுணப் பரம்பொருளைப் பற்றிக்கொண்டு நிலைத்து நிற்கும். அது நிலைத்துநிற்குமாகுல் கருவிகரணங்கள் எல்லாம் தத்தம் தொழிலைச் செய்யாமல் ஒழிவுபெறும். அப்போது வாயுவு ஒடுங்கிப் பிரமரந்திரமார்க் கத்தை அடையும். பிரமரந்திரமார்க்கத்தை அடைதலே மோட்சமாதலால் வைதிகநூல்களெல்லாம் ஒரேபொருளில் முடிந்தனவாம். ஆதலால் யாவரும் தத்தம் சத்திக் கிசைந்ததைக் கைக்கொண்டு அநுஷ்டித்து மோட்சானந்தம் பெறலாமென்பதே வைதிகநூல்களின் கருத்தென்றறிக.

(தொடரும்) சிவானந்தசாகர யோகீஸ்வரர்.




1. சிலந்திக் கட்டிக்கு:—துத்தித் தழையைக் கொண்டுவந்து விளக்கெண் ணெயில் வதக்கிக் கட்டக் குணமாகி, வலி நீங்கும்.

2. பழைய காரக்குகளைப் புதுப்பித்தல்:—பழைய காரக்குகளைக் கொண்டு வந்து சூடான வெந்நீரில் 1-மணிநேரம் கொதிக்க வைக்க அது அதிகநாள் உழைக்கும்.

3. தூக்கம் வருவதற்கு:—நம் தாய் நாடாகிய, இந்தியாவில் பகலில் வேலை செய்து இரவில் தூக்கமில்லாமல் பலர் கஷ்டப்படுகிறுர்கள். அப் படி இருக்கிறவர்கள், இரவில் குளிர்ந்த ஜலத்தில் குளித்து, படுக் கைக்குப் போகும்போது அரைக்கால்படி பால் பருகவேண்டும்.

Bandy. B. K. ராமானுஜம்.

உ

சிவமயம்



## எறிபத்தநாயனார் புராணத்தின் சில விசேடக் குறிப்புகள்.

(309-ம் பக்கத் தொடர்ச்சி.)

புகழ்ச்சோழநாயனார் புராணத்தில், "மண்ணுக்குயிராமெனு மன்னவனார்" என்றும், "சென்று சிவகாமியார் கொணர் திருப்பள்ளித்தாம-மன்றுசிதறுங்களிற்றை யறவெறிந்து பாகரையுங் - கொன்றவெறி பத்தரெதி ரென்னையுங்கொன் றருளுமென - வென்றிவடி வாள்கொடுத்துத் திருத்தொண்டின் மிகச் சிறந்தார்" என்றும், எறிபத்தநாயனார் புராணத்தில், "மறிந்தவிக் களிற்றின் குற்றம் பாகரோ டிதனைமாள - வெறிந்ததே போது மோதா னருள்செயு மென்று நின்றார்." என்றும், "அங்கண ரடியார் தம்மைச் செய்தவிவ் வபராதத்துக் - கிங்கிது தன்னாற்போதா தென்னையுங் கொல்லவேண்டும்" என்றும், "என்பெரும் பிழையினாலே யென்னையுங் கொல்லும்" என்றும் கூறுமாற்றால், புகழ்ச்சோழர், உலகிற்குத் தாம் உயிரும், உடலுமா யுள்ளவ ரென்பது பெறப்படுகின்றது.

"தந்திரத் தலைவர் தாமுந் தலைவன்ற னிலைமை கண்டு
வந்துறச் சேனை தன்னை வல்விரைந் தெழமுன் சாற்ற
வந்தரத் தகல மெல்லா மணிதுகிற் பதாகை தூர்ப்ப
வெந்திறத் தேரு மாவு மிடையிடை களிறு மாகி"
(எறிபத்தநாயனார் புராணம்-29.)

"வில்லொடு வேல்வா டண்டு பிண்டிபா லங்கண் மிக்க
வல்லெழு முசல நேமி மழுக்கழுக் கடைமுன் னான
பல்படைக் கலன்கள் பற்றிப் பைங்கழல் வரிந்த வன்க
ணெல்லையில் படைஞர் கொட்புற் றெழுந்தன ரெங்கு மெங்கும்"
(எறிபத்தநாயனார் புரா-30.)

"சங்கொடு தாரை காளந் தழங்கொலி முழங்கு பேரி
வெங்குரற் பம்பை கண்டை வியன்றுடி திமிலை தட்டி
பொங்கொலிச் சின்ன மெல்லாம் பொருபடை மிடைந்த பொற்பின்
மங்குல்வான் கிளர்ச்சி காண மருங்கெழுந் தியம்பி மல்க." (ஷை-31)

"தூரியத் துவைப்பு முட்டுஞ் சுடர்ப்படை யொலியு மாவின்
றார்மணி யிசைப்பும் வேழ முழக்கமுந் தடந்தேர்ச் சீரும்
வீரர்தஞ் செருக்கி னார்ப்பு மிககெழுந் தொன்றா மெல்லைக்
காருடன் கடைநாட் பொங்குங் கடலெனக் கலித்த வன்றே" (ஷை-32)

"பண்ணுறு முறுப்பு நான்கிற் பரந்தெழு சேனை யெல்லா
மண்ணிடை யிறுகான் மேன்மேல் வந்தெழுந் ததுபோற் றோன்றத்
தண்ணளிக் கவிகை மன்னன் றானைபின் றொடரத் தானே
ரண்ணலம் புரவி மேல்கொண் டரசமா வீதி சென்றான்" (ஷை-33)

என்று கூறப்பட்டிருத்தலானும்,

"மனுவி னூன்முறை வழங்கு கன்விதிகழ் மந்திரக் கிழவர் சூழ்தரப்
பனிமலர்ச் சிகழி வாகை சூடிய பதாகினித்தலைவர் மாடுறப்
புனித வேதியர்க ளாசிமாரிகள் பொழிந்து வந்தருகு மொய்த்திடக்
கனியு மன்பினொடு சிவபுராணமிவை கழறுவோ ரெதிரின் வைகவே"
(கருவூர்ப்புரா-புகழ்ச்சோழச்சருக்கம்-8)

"நவமணிக்குவை பசும்பொ னிட்டமணி நன்கமைத்து மிளிர்கோசிகங்
கவன வாம்புரவி பாவடிப்பரும யானைமொய்த்தொளிர் வளங்களு
மவனியின்கணள வில சுமந்துமுறை திறையளந்துமணி முன்றில்வா
யிவர்பொன் மாமவுலி புனையும் வேலரச ரெதிர்புகுந்தடி யிறைஞ்சவே" (ஷை-9)

"படங்கொள் கட்செவிக் கரையனப் பாந்தண்மா முடியிற்
கிடந்த பூதலந் தமதடிப் படுத்திவிண் கெழுமி
யிடங்கொள் வெண்மதிக் கவிகையெண் டிசைகளுங் கவிப்ப
மடங்க லாதனத் தினிதுவீற் றிருந்தனர் வளவர்" (ஷை-10)

எனக் கருவூர்ப் புராணம் புகழ்ச்சோழச்சருக்கத்தில் கூறப்பட்டிருத்தலானும், புகழ்ச்சோழர் அரசரேறென்பதும், படைமுதலிய ஆறுறுப்புகளைச் செவ்வையாய் உடையவரென்பதுந் துணியப்படும்.

"மாமதின் மஞ்சு சூழு மாளிகை நிரைவிண் சூழுந்
தூமணி வாயில் சூழுஞ் சோலையில் வாசஞ் சூழுந்
தேமல ரளகஞ் சூழுஞ் சிலமதி தெருவிற் சூழுந்
தாமகிழ்ந் தமரர் சூழுஞ் சதமக னகரந் தாழ"

"கடகரி துறையி லாடுங் களிமயில் புறவி லாடு
மடர்மணி யரங்கி லாடு மரிவையர் குழல்வண் டாடும்
படரொளி மறுகி லாடும் பயில்கொடி கதிர்மீ தாடுந்
தடநெடும் புவிகொண் டாடுந் தனிநகர் வளமை யீதால்"

எனத் "தொன்னெடுங் கருவூரென்னுஞ் சுடர்மணி வீதி மூதூர்" வளங் கூறப் படுவதால், புகழ்ச்சோழர் கோல்கோடாவரசர் என்பது கொள்ளப்படும்.

அரசர் படுகளத்தைக் குறுகியபோது பகைவர்களைக் காணாது, மிகுந்த கோபத்தோடு, "வென்றவர்யாவரென்ற" காலை, பாகர்கள் பணிந்து எறிபத்தரைச் சுட்டிக்காட்டி, "தீங்குசெய்தார்-பரசுமுன் கொண்டுநின்றவிவரெனப் பணிந்து" சொன்னதும், எறிபத்த நாயனாரை நோக்கினர். அவரது சிவ வேடப் பொலிவைக்கண்ட மாத்திரையே கோபந் தணிந்தவராய், "குழையணி காதினானுக் கன்பராங் குணத்தின் மிக்கார் - பிழைபடி னன்றிக்கொல்லார் பிழைத்ததுண் டென்றுட் கொண்" டதனாலும், "மைத்தடங் குன்று போலு மதக்களிற் றெதிரேயிந்த - மெய்த்தவர் சென்றபோது வேறொன்றும் புகுதாவிட்ட - வத்தவமுடையேனானேன்" என்றமையாலும் புகழ்ச்சோழர் அன்பும், அருளும், அடியார் பத்தியும், சிவபத்தியும், பழிக்கஞ்சுங் குணமும் உடையவரென்பது அறியக் கிடக்கின்றது.

அதிகனென்னும் மாற்றான்மேற் சென்ற போர்வீரர்கள் அனுப்பிய பொதியை அவிழ்த்தபோது, அதிலிருந்த படைவீரர்களின் தலைகளுள் ஒன்றில் சடையிருக்கக்கண்டு, உடல்நடுங்கி, மனங்கலங்கி, கண்கலுழ்ந்து, உடனே தீமூட்டச்செய்து, அச் சடைத் தலையைப் பொற்றாம்பாளத் திட்டு முடிமேற்றாங்கி, பஞ்சாட்சரத்தைத் தியானித்துக்கொண்டே அக்கினியில் மூழ்கினாரென்றால், அவரது பத்தித் திறத்திற்கு வேறு சான்று வேண்டுமோ?

(தொடரும்) பஞ்சாட்சரபுரம், வாலையாநந்தம்.



# வைணவம்

ஸ்ரீ

## நடாதூரம்மாள்.

சென்ற தை மாதத்து ஆனந்தபோதினிச் சஞ்சிகையில், நடாதூரம்மான் என்று பிரசித்திபெற்ற ஒரு ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியரின் சரிதையைப் பற்றிச் சுருக்கமாக ஓரன்பர் எழுதியிருந்ததைக் கண்ணுற்றோம். அதில் உள்ள மூன்று தவறுதல்களை இங்கே தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

நடாதூரம்மான் என்பவர் ஆண்பாலரேயன்றிப் பெண்பாலரல்லர். அம்மாள் என்றது சிறப்புப் பெயர். வாத்ஸ்ய வரதாசார்யர் என்பது நிஜநாமதேயம். இவ்வுண்மை உணராது, "இப்பெண்கள் நாயகம்" என்றும், "அம்மையார்" என்றும், "இவரைப்போல் எத்தனையோ பெண்மணிகள் பகவத்பக்தியிலீடுபட்டு மேன்மை யடைந்திருக்கின்றனர்" என்றும் எழுதியிருப்பன வியக்கத் தக்கனவே.

அன்றியும், இவ்வாசிரியருடைய திருவடிகளில் ஸ்ரீபராசரபட்டரென்பவரும் சேர்ந்திருந்தார் என்றும் அவர் சுருதப்ரகாசிகை இயற்றினார் என்றும் எழுதப்பட்டுள்ள விஷயமும் மயக்கத்தாலாயது. நடாதூரம்மாள் திருவடிகளில் ஸுதர்சனபட்டர் என்பவர் ஆச்ரயித்திருந்ததுண்டு; அவரே சுருதப்ரகாசிகை இயற்றியருளினவர். ஸ்ரீபராசரபட்டர் அல்லர்.

அன்றியும், நடாதூரம்மாள் சில வாதிகளைவென்று வாதிஹம்ஸாம்புதர் என்னும் பெயரை ஏற்றதாக எழுதியுள்ளதும் மருள். அம்மாள் திருவடிகளில் ஆசிரயித்தவரும் ஸ்ரீமத் வேதாந்த தேசிகருக்கு ஆசிரியருமான கிடாம்பி அப்புள்ளார் [ஆத்ரேய. ராமாநுஜாசார்யர்] என்பவர்க்கே வாதிஹம்ஸாம்புதர் என்ற திருநாமம் உள்ளது. அதனை அம்மாளுக்கு உள்ளதாகக் கூறுதல் மாறுபாடு.

இப்படிப் பல மருள்கள் தோன்றுமாறு ஒரு விஷயத்தை எழுதுவது அழகியதன்று. ஆசிரியர்களின் சரித்திர மெழுதுவதென்றால் நல்ல ஆராய்ச்சியுடன் எழுதுதல்நன்று. ஒன்று கிடக்கவொன்று ஓதிவைப்பது பின்னோர்க்குப் பெரும்பான்மை மயக்கங்களை விளைத்திட்டுத் தத்துவ வுணர்ச்சியைத் தடைசெய்திடும். ஆகவே, அறிஞர்கள் ஆராய்ந்து எழுதத்துணிய வேண்டுமென்று வேண்டிக் கொள்கிறோம்.

திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகை யாசிரியரின்,

ஓர் சீஷன்.






## ஆத்திசூடி உதாரணக் கதைகள்

(313-ம் பக்கத் தொடர்ச்சி.)

### "கோதாட் டொழி"

"கோது—குற்றம் பொருந்திய, ஆட்டு—விளையாட்டை, ஒழி—(நீ) நீக்கி விடு" என்பது இதன் பொருள்.

விளையாட்டுக்களில் பலவகைகளிருக்கின்றன; அவற்றுள் உடம்புக்கு வலிமையைக் கொடுத்து நன்மையை உண்டாக்கத் தக்கவைகளுமுண்டு; உயிருக்கே ஆபத்தை விளைவிக்கத் தக்கவைகளுமுண்டு. சிலர் தினந்தோறும், உடம்பை நல்ல நிலையில் வைத்துக்கொள்ளும் பொருட்டு வேலை யொழிந்த நேரங்களில் காலையிலோ மாலையிலோ விளையாட்டுக்கென ஒரு நேரத்தை வகுத்துக்கொண்டு அந்நேரத்தில் நலந்தரத்தக்க விளையாட்டுக்களைச் செய்து நன்மையடைந்து வருகின்றார்கள். சிலர், கிரமந்தவறிக் கேடு விளைவிக்கத் தக்க விளையாட்டுக்களில் எந்தநேரத்திலும் புகுந்து ஆபத்துக்குள்ளாகின்றார்கள். அவ்வாறு கேடடைந்தவர்களின் கதைகள் பலவுண்டு; அவற்றுள் ஒன்றை இங்கு மாணவர்கள் அறிந்துகொள்ளும் பொருட்டு விளக்குவாம்.

காவிரியாற்றில் மழைக்காலத்தில் மிகுந்த வெள்ளம் பெருகி இருகரைகளிலும் புரண்டோடுவது வழக்கம். அவ்வாறு பெருக்கெடுத்தோடுங் காலத்தில், திருச்சிராப்பள்ளியில் அந்த ஆற்றுக்குக் குறுக்கேயுள்ள பாலத்தின் கீழ்பக்கமுள்ள கட்டைச் சுவரின்மேல், நீரில் நீந்தத்தெரிந்த பல சிறுவர்கள் ஏறி நின்று வெள்ளத்திற்பாய்ந்து நெடுந்தூரம் வரை நீந்திச்சென்று கரையேறி விளையாடுவார்கள். போலீஸ்காரர்கள், "இது அபாயமான விளையாட்டு" என்று அவர்களைத் தடுத்தாலும் அவர்கள் நிற்பதில்லை. இத்தகைய விளையாட்டு நெடுங்காலமாக நடந்து வந்தது. முடிவாக ஒரு வருடத்தில் போலீஸ்காரர்கள், "பாலத்தில் ஏறி எவரும் வெள்ளத்தில் குதிக்கலாகாது" என்று அச்சிறுவர்களைக் கண்டிப்பாகத் தடுத்துவிட்டார்கள். அச்சிறுவர்களில் ஒருவன் மாத்திரம் அச்சேவகர்களுடைய கட்டுக்கடங்காமல் அவர்கள் ஒரு பக்கம் பார்த்துக் கொண்டிருக்கும்போதே மற்றொரு பக்கம்போய் வெள்ளத்திற் பாய்ந்துவிடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தான். அவனைப் பிடித்துக் கண்டிக்க, போலீஸ்காரர் எவ்வளவோ முயன்றும் அவர்களால் அது முடியவில்லை. அவன், ஏதோ ஓர் அவசர வேலையாகச் செல்பவன்போல் போலீஸ்காரர் முன்பு நடித்துக்கொண்டே வேகமாகப் பாலத்தின்மேல் நடந்துபோய்த் திடீரென்று வெள்ளத்திற் பாய்ந்து விடுவான். அவனுக்கு அதில்

மிக்க உற்சாகமுண்டு. மனிதர்கள் பார்த்து நடுங்கும்படி கொந்தளித்துச் செல்லும் அவ்வெள்ளத்திற்கு அவன் சிறிதும் அஞ்சுவதில்லை.

இப்படி அவன், இந்த ஆபத்தான விளையாட்டை நடத்தி வருங்காலத்தில் ஒருநாள் புதியவெள்ளம் பெருகிச் சுழித்துக் குதித்துப் பேரிரைச்சலுடன் மரம், செடி, கொடி முதலியவற்றை அடித்துக்கொண்டு மிக்க வேகமாய்ச் சென்றது. அதைப் பார்த்து மனிதர்கள் அஞ்சிப் பாலத்தின் மேலே கூடச் செல்லாமலிருந்தார்கள். அத்தருணத்திலும் மேற்கூறிய சிறுவன், தனக்கேற்பட்டிருந்த செருக்கால் சிறிதும் அஞ்சாமற்சென்று பாலத்தின் மேலேறி வெள்ளத்திற் பாய்ந்தான். அந்தோ! பரிதாபம்! அவன் அவ்வாறு பாய்ந்த மாத்திரத்தில் அவனுடம்பை ஒரு பெரியகொடி சுற்றிக்கொண்டது. அதனால் அவன் கால்கைகளை அசைத்து நீந்த ஏதுவில்லாமற் போயிற்று. உடனே ஒரு பெரிய நீர்ச்சுழியானது அவனைத் தலைகீழாகக் கொண்டுபோய் மணலுக்குள் சொருகிவிட்டது. சிறிது நேரத்திற்குள் அவன் மாண்டொழிந்தான். அவனுடைய உடம்பும் பிறர் கண்ணுக்கு அகப்படாமற் போயிற்று.

(தொடரும்) செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

## வீட்டில் வைக்கத்தகாத மரங்கள்.

வீட்டில் வைக்கத்தகாத பல மரங்களிருக்கின்றன. இவற்றை வீட்டருகில் வைப்பதால் கெடுதி யுண்டாகும். அப்படியிருந்தும் சிலர் அக்கெடுதியை உணராமல் கண்ட கண்ட மரங்களையெல்லாம் வீட்டில் வைத்துக் கொள்கின்றனர். ஆதலின் அவற்றை அவர்கள் தெரிந்து நீக்கும் பொருட்டு இதனடியில் விளக்குவாம்.

"பருத்தி யகத்தி பனையெட்டி நாவல்
எருக்கு முருக்கிலவை யெட்டும்—பெருக்கமுடன்
இல்லருகி னின்றக்கா லிந்திரனே யானாலும்
செல்லப்போய் நிற்பாள் திரு"

என்றபடி பருத்தி, அகத்தி, பனை, எட்டி, நாவல், எருக்கு, முருக்கு, இலவு ஆகிய மரங்கள் ஒரு வீட்டினருகே நின்றால், அந்த வீட்டுக்காரன் செல்வத்திற் சிறந்த இந்திரனயிருந்தாலும் இலக்குமி அவனுறவு போகச்சென்று வேறேரிடத்திற் சேருவாள்; (அதாவது அவனுடைய செல்வம் நீங்கிவிடும்).

இன்னும், அலரி, நந்தியாவட்டம், கருங்காலி, ஆல், புளி, கல்லால் முதலியவைகளும் வீட்டருகே நிற்றல் கூடாதென்று பெரியோர் கூறுவர்.

ஆதலின், செல்வத்துடனிருக்க விரும்புவோர் இந்த மரங்களை வீட்டருகில் வைக்காதிருப்பாராக.

செம்பியன்.




## மாதரும் குடும்பமும்.

(316-ம் பக்கத் தொடர்ச்சி.)

மாமிகளாயுள்ளவர்கள் தங்கள் மருமக்களைத் தம் பெண்களெனக் கருதி நடந்து கொள்ளுவார்களானால் புதிதாகவந்த அவர்களும் தங்கள் மாமிகளைத் தாய்மாராகப் பாவித்து நடந்துகொள்வர். இதனால் குடும்பம் மிக்க சந்தோஷமும் சமாதானமும் நிறைந்த குடும்பமாக விளங்கும். திருமகளும் அக்குடும்பத்தில் தாண்டவ மாடுவாள் என்று சென்ற மாதச் சஞ்சிகையிற் கூறினோம். இனி புருஷர் தம் மனைவியரிடத்து எவ்வாறு நடந்து கொள்ள வேண்டுமென்பதைக் குறித்துச் சிறிது கூறுவாம்.

பெரும்பாலும் எல்லா நூல்களும் எல்லாப் பத்திரிகைகளும் குடும்ப விஷயத்தைப்பற்றிப் பேசும்பொழுது பெண்களைப்பற்றி மட்டும் பேசுகின்றனவேயன்றிப் புருஷர்களைக் குறித்துப் பேசுவது துர்லபமா யிருக்கின்றது. அநேக நூல்கள் பெண்களை மிக இழிவாகக் கூறியிருக்கின்றதையும் காணலாம். அதற்குக் காரணம் இல்லாமலுமில்லை. என்ன காரணம்? எல்லாம் புருஷர்களால் எழுதப்பட்டிருத்தலே இதற்குக் காரணம் என்பர். அதுவும் யோசிக்குமிடத்து உண்மையென்றே சொல்லவேண்டியதா யிருக்கிறது. பெண்களில் பலர் துஷ்டர்களா யிருக்கலாம். அவர்களைப்போல புருஷர்களிலும் பலர் துஷ்டர்களா யிருப்பதில்லையென்று கூற முடியுமோ? திரேதா யுகம் சீதையாலும் துவாபரயுகம் திரௌபதையாலும் அழிந்ததாக நூல்கள் கூசாமல் கூறுகின்றனவே! ஏன் இராவணனாலும் துரியோதனனாலுந்தான் அழிந்தனவென்று கூறலாகாதோ! 'நன்மனைதோறும் பெண்களைப் படைத்து நமனை என் செய்யப்படைத்தாய்' என்கிறாரொருவர். அவர் அநுபவத்தில் அவர் தம் மனைவியால் மெத்த கஷ்ட மடைந்திருக்கலாம். அவரைப்போலப் பல புருடர் கஷ்டப்படுவதையும் பார்த்திருக்கலாம். ஆனால் இதைப் போலவே பல ஸ்திரீகளும் தம் கணவரால் கஷ்டப் பட்டிருக்கலாகாதோ? அது அவருக்குத் தெரியாது பாவம்! அவரைப்போலவே ஓர் மாதும் பாடியிருந்தால் 'நன்மனைதோறும் புருடரைப் படைத்து நமனையென் செய்ய படைத்தாய்' என்று ஏன் பாடியிருக்கமாட்டாள்! பாடியே யிருப்பாள்.

உலகமே ஸ்திரீ வடிவம் என்பதை ஒவ்வொருவரும் உணரவேண்டும். இப்படிக் கூறுவது சிலர்க்கு வியப்பா யிருக்கலாம். உலகம் சத்தி வடிவம்; சத்தியினாலேயே உலகம் உண்டாயிற்று; சத்தியின்றேல் சகத்துமில்லை என்று கூறினால் வியப்புண்டாகாது. ஆகவே ஸ்திரீகள் சத்திவடிவம் என்பதில் சந்தேகம் யாது? வாகீசர் (திருநாவுக்கரசு சுவாமிகள்) திருவையாற்றிற்குச்

சென்ற காலத்தில் ஆண்களெல்லாம் சிவசொரூபமாகவும் பெண்களெல்லாம் சத்தி சொரூபமாகவும் இருந்ததாகக் கூறியிருக்கின்றனர். மிருகங்களும் பறவைகளும்கூட அப்படியே யிருந்ததாகச் சொல்லுகிறார். இவ்விடத்தில் சிலர் சிவம் பெரிதா சத்தி பெரிதா என்னும் ஒரு கேள்வியைக் கிளப்புவர். சிவமில்லாமல் சந்தியில்லை; சத்தியில்லாமல் சிவமுமில்லை என்று பெரியோர் கூறியிருக்கின்றமையின் நாமொன்றும் புதிதாக இக்கேள்விக்கு விடையிறுக்கவேண்டிய அவசியம் இல்லை. இதனால் சிவமும் சத்தியும் சமமென்றேற்படுகின்றது. இதைக் காட்டவே அர்த்தநாரீஸ்வர சொரூபம் தோன்றியது. அர்த்தநாரீஸ்வர சொரூபத்தால் நாம் அறிந்து கொள்ளவேண்டியது இவ்வுண்மையேயாம். திரிமூர்த்திகளில் ஒருவர் பெண்ணை இடத்திலும் சிரத்திலும் கொண்டிருப்பதும், ஒருவர் மார்பினிடத்து வைத்திருப்பதும், மற்றொருவர் நாவில் வைத்திருப்பதும் மாதர் தம் மேன்மையை விளக்கவேயென்பது வெளியாகின்றது.

எது எப்படியாயினுமாகுக. ஸ்திரீகளில்லாவிட்டால் உலகமில்லை என்பது மாத்திரமேனும் மறக்கமுடியாத உண்மைதானே. அத்துடன் அவர்கள் சிலர் நினைக்கிறபடி தாழ்ந்தவர்களல்லர் என்பதையும் மறக்கக்கூடாது.

'மனிதர்க்கு இயல்பாகவே யமைந்துள்ள இரண்டு கண்களில் நல்லகண் எது? இழிவான கண் எது? ஏற்றத் தாழ்வின்றிச் சமமானவையே யல்லவா? அதுபோலவே, ஆண் பெண் என்னும் இருபகுப்பினரும் சமமானவர்களே' என்னும் கருத்தை யமைத்து ஓர் புலவர் பக்ஷபாதமின்றி நடு நிலைமையில் நின்று,

> "இக்கினை நகுமொழி எழில்மின் னாரின்,ஆண்
> மக்கள்மிக் கோரெனல் மடமையாம்.இரண்டு
> அக்கமும் ஒக்குமே யன்றி நல்லகண்
> எக்கண்?மற் றெக்கணே இழிவு டைக்கணே." (அக்கம்=கண்)

என்று பாடியிருப்பது யாவரும் கவனிக்கத் தக்கதாம். 'நான் உயர்ந்தவன்' என்னும் அகங்காரத்தைவிட்டுப் பார்க்குமிடத்து யாவர்க்கும் இவ்வாறு கூறுவது குற்றமாகத் தோன்றாது.

வாசகர்களே! நாம் இவ்வாறு கூறுவதால் புருடர்களைப்போல மாதரும் சர்வ சுதந்திர முடையவர்களென்றாவது, புருஷரைப்போலவே அவர்களும் உத்தியோகம் வியாபாரம் விவசாயம் முதலிய தொழில்களைச் செய்யலாமென்றாவது, கண்ட விடங்களுக்கெல்லாம் சென்று திரிந்து உலாவலாம் அவர்களிஷ்டப்படி நடக்கலாமென்றாவது கூறினதாகக் கருதிவிடலாகாது. மாதர் கணவரிடத்து எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்பதைப்பற்றி அநேக வருஷங்களாக நாம் வற்புறுத்திக் கூறிவருகிறோம்; இனியும் அங்ஙனமே கூறுவோம். ஆனால் ஸ்திரீகள் தாழ்ந்தவர்கள், அவர்கள் ஒன்றும் தெரியாதவர்கள், ஒன்றுக்கும் உதவாதவர்கள், நமக்கு அடங்கி ஊழியம் செய்யவும் சுகத்தைத்தரவும் மாத்திரம் உரியவர்கள், அவர்களை உதைக்கவும் அடிக்கவும் திட்டவும் கட்டவும் நமக்கு அதிகாரம் உண்டு என்னும் இவற்றைப் போன்ற துர் அபிப்பிராயங்கள் கொள்வது தவறு என்பதை வற்புறுத்தியே இவ்வாறு கூறநேர்ந்தது.

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், சித்தூர்.

# இந்திய மாதரும் மஞ்சள் குங்குமமும்.

நான் 15-1-28 தேதியன்று வடமதுரை ஸ்டேஷனிலிருந்து திருவாந்திரம் எக்ஸ்பிரஸ் வண்டியில் திருச்சிக்குச் செல்லுகையில் நான் உட்கார்ந்திருந்த ரயில் வண்டியில் என் எதிரில் சுமார் 35-அல்லது 40-வயதிருக்கும் ஓர் பிராமணமாது அமர்ந்திருந்தனள். நாங்கள் அமர்ந்திருந்த வண்டி (Corridor) வண்டி; அதாவது ஒரு ஓரமாக வழிவிட்டு உள்ளே இருபுறமும் அமரக்கூடிய நீளமான பலகைகள் போட்டவண்டி. எங்களிருவரைத் தவிர மற்றும் அவ்வண்டியில் ஓர் முதலியார் ஜாதியைச் சேர்ந்த ஒருவரும், அவருடைய மனைவியும், அவர்களுடன் 9-அல்லது 10-வயதுடைய பெண்ணும் அமர்ந்திருந்தார்கள். நான் அவ்வண்டியில் புகுந்த உடனேயே சகிக்கமுடியாத வாசனை யுண்டாயிற்று. சிறிது நேரத்தில் அவ்வளவு மணமும் என் எதிரில் அமர்ந்திருந்த மாதினிடமிருந்து வந்ததை யுணர்ந்தேன். சிறிதுநேரம் சென்றபின் அப்பிராமணமாது முதலியார் பெண்ணை நோக்கி, "அம்மா! உனக்கு மணமாய் விட்டதா?" என்றாள். அப்பெண், "ஆகவில்லை" என்று கூறினாள். உடனே அம்மாது ஓர் பெருத்த நகைப்புடன், "நீ எதற்காக அதற்குள் குங்மம் அணிந்திருக்கிறாய்?" என்று கேட்டாள். அப்பெண் அதற்கு, "ஏன், மணமாவதற்குமுன் குங்குமம் அணியக்கூடாதா? அப்படியானால் சுமங்கலியாகிய தாங்கள் ஏன் குங்குமம் அணியாமல் சாந்து அணிந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டாள். அச்சிறிய பெண்ணின் சாதுரிய விடை இன்னும் என்காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. பின்பு அப்பிராமணமாது ஏதோ சொல்ல என்னை நோக்கித்திரும்பி, பின்பு சொல்லவந்ததை நிறுத்தி, "ஏன் தாங்களும் கர்நாடகம் தானோ?" என்றாள். நான் அன்று மதுரையில் மீனாக்ஷியம்மனுக்கு அர்ச்சனைசெய்து எனக்கு ஓர் நண்பர் அனுப்பியிருந்த குங்குமத்தை நெற்றியில் அணிந்திருந்தேன். நான் உடனே, "அம்மா! குங்குமம் அணிவது கர்நாடகம் என்கிறீர்களே! கர்நாடகத்தைவிட புதுநாடகம் எந்த விதத்தில் உயர்ந்தது? அது எப்படியாயினும் குங்கும மணிதலில் என்ன கெடுதல்?" என்று கேட்டேன். உடனே அந்தப் புதுநாடக அம்மையார் ஓர் பெரிய பிரசங்கத்திற்கு ஆரம்பித்து விட்டார்கள். என்ன சொல்லியும் விடாமல் பேசத் தொடங்கி விட்டார்கள். அந்த அம்மையார் சிறிது ஆங்கிலக்கல்வியும் பயின்றவர் போலும். "முன்காலத்தில் நம்மவர்க்கு சோப் என்பதும் சாந்து என்பதும் தெரியாமலிருந்தன. அதனால் அவர்கள் மஞ்சளைப் பூசிக்கொண்டும் நெற்றியில் மூதேவி குங்குமத்தை யிட்டுக்கொண்டு மிருந்தனர். நான் சுமார் 12-வருடங்களாக மஞ்சள் பூசிக்கொள்வதையும், குங்குமமணிவதையும், மற்ற இந்திய அநாகரீக வழக்கங்களையும் விட்டுவிட்டேன்" என்று மிக்க மதிப்போடு சொல்லிக்கொண்டார்கள். அத்துடன் எங்கள் சம்பாஷணை நிறுத்தப்பட்டது. நான் என்னபுகன்றாலும் அவைகள் அம்மாதிற்குக் கொஞ்சமும் பிரயோஜனப்படாமல் செவிடன் காதில் ஊதிய சங்கைப் போலாகுமென்று உணர்ந்தேன்.

மஞ்சளையும், குங்குமத்தையும்பற்றி அவ்வாறு இழிவாகப் பேசும் இந்திய மாதரும், அதிலும்-பிராமண மாதரும்-உண்டென்பதை நான் அன்றே உணர்ந்தேன். குங்குமமும் மஞ்சளும் அநாகரீகமானவையென்பதும் குங்குமம் முகத்தை "மூதேவி" போலாக்கக்கூடியதென்பதையும் அன்றே நான் அறிந்தேன். இதுவும் கலியுக விந்தைகளில் ஒன்றுபோலும். நாகரீகப்"பேயின்" கூற்றுப்போலும். மஞ்சள் குளிப்பதால் உடம்பிற்கு உள்ள குணங்கள் கணக்கற்றவை. மஞ்சள்உடம்பை மிகவும் சுத்தமாக்கக் கூடியது. உடம்பில் உள்ள வேர்வை முதலிய பலவித துர்கந்தங்களைப் போக்கக்கூடியது. ரோம வளர்ச்சியைத்தடுக்கக்கூடியது. அன்றியும் உடம்பிற்கு மிக்க வசீகரத்தையும் அழகையும் கொடுக்கக் கூடியது. நாலடியாரில் முனிவர் கல்வியின் பெருமையைப் பற்றிக்கூறும்போது,

"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல"

என்றார். அவரும் "மஞ்சளழகு" என்றார். மஞ்சள் குளிக்கும் மங்கையரை விட சோப்புக் குளிக்கும் மங்கையர்கள் எந்த விஷயத்தில் மேலானவர்கள் என்பது எனக்குச் சிறிதும் புலப்படவில்லை.

பிறகு குங்குமம் முகத்தை "மூதேவி" போலாக்குகிறது என்று அந்த அம்மையார் சொன்னார்கள். எனக்குத் தெரிந்த வரையில் குங்குமத்தைப் போல் முகத்திற்கு லக்ஷிமீகரமும் அழகும் தரக்கூடிய வஸ்து வேறொன்றுமிருப்பதாக நான் அறிந்ததில்லை. சாந்து வெள்ளை மேனியுடையவர்கள் முகத்தில்மட்டுமே நன்றாக எடுத்துக் காட்டுகிறது. ஆனால் இரத்த நிறமாயிருக்கும் குங்குமமோ வெள்ளை மேனியுடையவரா யிருப்பினும், கருத்த மேனியுடையவரா யிருப்பினும் நன்கு எடுத்துக்காட்டும். சிலர் தற்காலம் சாந்தையும் ஓர் பெரிய பொட்டாக மையநெற்றியில் அணியாமல், பொட்டு இருக்கிறதோ இல்லையோ என்று சந்தேகிக்கக்கூடிய வண்ணம் ஓர் எள்ளினும் சிறிய பொட்டை இருபுருவத்திற்கு மிடையே புகுத்துகின்றனர்.

முற்காலத்தில் ராஜசபையில் அதிமதுரக் கவிராயனெதிரில் காளமேகப் புலவர் பாடியபோது, அவர் முற்றும் அம்பிகையின் அருளால் பாடுபவராதலின் அந்த அம்பிகை அங்கு அவரெதிரில், பிரஸன்னமாய்த் தங்குவதற்கு ஓரிடமும் காணாது கடைசியில் அங்கிருந்த யானையின் நெற்றியிலிருந்த குங்குமத்தில் தங்கியதாகச் சரித்திரம் சொல்லப்படுகிறது. புது நாடகத்தில் அம்பிகையின் வாசத்திற்குரியதான குங்குமமும் "மூதேவி"யின் அறிகுறியாய்விட்டது. மணமான இந்திய மாதர்கள் குங்கும மணியாமல் சாந்தை யணிவதே முகத்தை "மூதேவி" போல் தோன்றச் செய்கிறது என்பது என் உண்மையான அபிப்பிராயம். மணமானவராயினும் சரி, ஆகாதவராயினும்சரி குங்குமமே இந்திய மாதருக் குகந்த திலகம் என்பது என் திண்ணமான எண்ணம். இந்திய மாதர்கள் இவ்வாறு தங்கள் பெருமையைத் தாங்களே குறைத்துக் கொள்வது மிக்க கேவலம். இத்தகைய மிஸ் மேயோக்கள் (Miss Mayos) இந்தியாவில் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்களோ தெரியவில்லை. சுமங்கல்ய பலத்தையும் சுபாவத்தையும் தங்கவும் ஓங்கவும் செய்யும் இந்திய மாதர்கட்கு எந்நாளில் திங்களையும் கங்கையையும் அணிந்த சங்கரன் மதிகொடுப்பனோ அந்நாளையே நம்நாட்டின் க்ஷேமகால ஆரம்ப நாளாக நான் கருதுவேன்.

T. V. சிவ சுப்பிரமணியம், பீ. ஏ. சீனியர் ஸ்டூடண்டு.

---




## கப்பல் வியாபாரம்.

(36-ம் பக்கத் தொடர்ச்சி.)

தபால் போக்கு வரவு சாதனத்திற்காக ஏற்பட்ட நீராவிக்கப்பல் கம்பெனிக்காரர்கள் வெள்ளையராதலால் துரைத்தனத்தாரின் உதவியால் வியாபாரத்தைத் தொடங்கினர். இதைக்கண்ட பம்பாயிலிருந்த பெருத்த வியாபாரிகள் ஏராளமான பொருட்செலவிட்டுக் கலங்களைக் கட்டினராயினும் அவர்களுடைய கப்பல்கள் நன்நம்பிக்கை முனை (Cape of Good Hope) வரையிலுந்தான் சென்றுவர முடிந்தது. ஆனால் கடற்கரையிலுள்ள நகரங்களிலும், வங்காளக்குடாக் கடலிலும் சுதேசக் கப்பல் வியாபாரிகள் முழு வியாபாரத்தையும் நடத்தி வந்தனர். 1869-ம் ஆண்டு, கடல் வியாபாரத்தைப் பொறுத்த அளவில், ஓர் முக்கிய வருஷமெனலாம். இவ்வாண்டில் 'சூயஸ் கால்வாய்' திறந்துவிடப்படவே கப்பல் வியாபாரத்தில் பல மாறுதல்களேற்பட்டன. ஐரோப்பியக் கப்பற் கம்பெனிக்காரர்களுக்குக் கீழ்த்திசையிலும் வாணிபம் வலுத்தது. இதனால் சுதேசிகளின் வியாபாரம் சிறிது தளர்ச்சியுற்றது. சூயஸ் கால்வாய் திறக்கப்பட்ட பின் 'பிரிட்டிஷ் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி' தனது 'இந்தியா' என்ற பெயருடைய கப்பலில் இந்திய நாட்டிலிருந்து பண்டங்களை ஏற்றிக்கொண்டு முதல் முதல் அக்காலவாய் மார்க்கமாக லண்டன்மா நகரை அடைந்ததுமல்லாமல், 1872-ல் ஆப்ரிக்காவின் கீழ்க்கரையிலும் வாணிபத்தைத் தொடங்கிற்று. 1873-ல் இக்கூட்டாளிகளுக்கு 500 ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களும், 200 இயந்திரக் கலைஞர்களும், 4000 கூலியாட்களுமிருந்தனர்; 52,000 டன் எடையுள்ள சாமான்களைக் கொள்ளத்தக்க 40 நீராவிக் கலங்களுமிருந்தன. இக்காலம் முதல் கீழ்க்கடலிலும் மேனாட்டு நீராவிக் கப்பல்கள் பெருகவாரம்பித்தன. 1905-ல் 'பிரிட்டிஷ் ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி'க்கு 431,594 டன் எடை தாங்கக் கூடிய 125 கலங்களும், 'பி அண்டு ஓ ஸ்டீம் கம்பெனி'க்கு 348,631 டன் கொள்ளக்கூடிய 59 கப்பல்களுமிருந்தனவெனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இதுபோன்று கடல் வியாபாரஞ் செய்த ஐரோப்பிய கம்பெனிகள் பல.

சுமார் 100 டன் எடைக்குமேற் சுமக்க வியலாத நம்நாட்டுப் பாய் மரக் கலங்கள் இந்நீராவிக் கப்பல்களுடன் போட்டி போட முடியவில்லை. நீராவியின் சக்தியால் சாதாரணப் படகுகளைவிடப் பன்மடங்கு வேகமாகச் செல்லக்கூடிய கப்பல்கள் தோன்றினமையாலும், செல்வத்திலும் செல்வாக்கிலும் மேனாட்டாரை நமது சுதேச வியாபாரிகள் எதிர்க்க முடியாமற் போனதாலும் சுதேசக் கப்பல் வியாபாரம் மங்க நேர்ந்தது. உள்நாட்டு வணிகருக்கு அரசாங்க ஆதரவுமில்லை. எனவே, கொஞ்ச காலத்தில் சுதேசக் கப்பல் வாணிபம் குன்றவாரம்பித்தது. அமெரிக்க, ஐரோப்பிய, ஜப்பானிய நாடுகள் போட்டி போட்டு வியாபாரஞ் செய்யப் புறப்பட்டன. இவை இந்திய நாட்டுக் கப்பல் வியாபாரம் குன்றியதற்கு முக்கிய காரணங்களாம்.

கராய்ச்சி, பம்பாய், மதராஸ், கல்கத்தா, இரங்கூன் ஆகிய இவ்வைந்தும் இந்தியாவின் முக்கிய பெருந் துறைமுகங்கள். இவற்றில் கணக்குப்படி

வருஷமொன்றிற்குச் சராசரி வியாபாரமாகும் 130 லட்சம் டன் நிறையுள்ள சரக்குகளில் நூற்றுக்கு இரண்டு வீதமே சுதேச சரக்குகள் செலவாகின்றன. இனித் தரை வியாபாரத்தைக் கவனிப்பின் 50-இலட்சம் டன் வியாபாரப் பண்டங்களில் நூற்றுக்குப் பதிமூன்று வீதமே அதன் விதியும் கணக்கிடப் பட்டுளது. இவற்றால் இந்தியா அடையும் நஷ்டம் 50 கோடி ரூபாயாகும். நாகரீகமடைந்த நாடுகளில் கரைவியாபாரம் பெரும்பாலும் சுதேசக்கப்பல் களுக்கென ஒதுக்கிவிடப்பட்டிருந்தும் இந்தியாவுக்கு அவ்வித சௌகரிய மேதுமில்லை. எதிலும் நாம் அநாகரிகர்களென மேனாட்டாரால் கருதப்படும் விந்தையே விந்தை !

நிற்க, கப்பல்கட்டுந் தொழிலைக் கவனிப்பின் அதுவும் மோசமாகவே இருக்கின்றது. தேசியக்கப்பல்களுக்கு என்று வியாபாரம் குறைந்ததோ அன்றே அத்தொழிலும் நசித்ததெனலாம். 1903-ம் வருடக் கணக்குப்படி நம்நாட்டு ஒவ்வொரு துறைமுகத்திலும் இரண்டல்லது மூன்றுவீதம் வருஷா வருஷம் 125 புதியகலங்களை உண்டாக்கிவந்ததாக அறிகின்றோம். 1904-ம் வருட ஜனசங்கியைப்படி 42,940 கப்பல்கட்டும் வேலைக்காரர்களிருந்து வந் தனர். அத்தொழிலாளிகளின் தனித்தொகைமட்டும் 14,322 ஆகும். அக் காலத்தில் கரையோரங்களில் 7,280 கப்பல்களும், கடலில் 1,300 கலங்களும் வியாபாரம் நடாத்திவந்தனவென்பது புலனாகின்றது. அத்தொழிலாளிகள் இப்பொழுது லஸ்கர்களாக அமர்ந்து கஷ்ட ஜீவனம் செய்து வருகின்றனர்.

இனித் துறைமுகங்களை ஆராயப் புகுவாம். பண்டையகாலத்தில் சுதே சக்கப்பல்கள் சென்றுவந்த துறைமுகங்களின் எண்ணிக்கை 1000 த்திற்கு அதிகரித்திருந்தது. கலங்கள் நேராக இலங்கை, ஜான்ஜிபார், அரேபியா, பார சீகம், சீனா, மலாக்கா, சுமத்திரா, ஜாவா, கம்போடியா, போர்னியோ முத லிய முக்கியத் துறைமுகங்களின் வாயிலாகப் பண்டங்களைப் பல விடங் களுக்கு மனுப்பிவந்தன. சென்ற நூற்றாண்டின் மத்தியிலிருந்த துறைமுகங் கள் 667 என காப்டன் டெயிலரும், 1889-ல் 236 என மற்றொருவரும் குறிப் பிட்டுள்ளார்கள். இயந்திரம் அதிகரிக்க கப்பல் கட்டுந்தொழிலும் மேனாட் டாரின் ஆதிக்கத்தால் செல்வாக்கடைய நமது வியாபாரத்தின் எழில் வீழ்ந் தது. நூற்றுக்கணக்கான துறைமுகங்கள் மீன் பிடிப்போர் வாழும் சிற்றூர்க ளாக மாறிப் பாழாயின. பல நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்தே பெருந் துறை முகங்களாயிலங்கிய கராய்ச்சி, பம்பாய், சென்னை, கல்கத்தா, இரங் கூன் ஆகிய ஐம்பேரிடங்களும் ஐரோப்பியப் பெருமிதம் நிறைந்த இடங்க ளாயின. இன்று நம் நாட்டுக் கப்பல்களிருந்த இடமே தெரியாமற்போயிற்று. கப்பல்கட்டும் ரேவுகளிருந்த இடமும் காணப்படவில்லை. பம்பாய், கல்கத்தா இவைகளிலுள்ள பழங்கால ரேவுகள் கப்பல் செப்பனிடுவதற்கே உபயோக மாகின்றன.

பூர்வம் ரோமர் இத்தாலியருடன் படை, பரி, பண்டங்கள் முதலியன விற்றுவாங்கி வியாபாரஞ் செய்தற்கு உரியதாயும், ஆயிரக்கணக்கில் துறை முகங்களைக் கொண்டு திகழ்வதாயும், திரைகடலோடியும் திரவியந்தேடு என் னும் திருவாக்கைப் பரிபாலிக்கும் யோக்யதை வாய்ந்ததாயும், கப்பல்கட்டுந் தொழிலில் மிகவுஞ் சிறந்ததாயும், நிலவிய நம் பாரதநாட்டின் கப்பல் வியா பார வீழ்ச்சிக்கு இயந்திரங்கள் அடிகோலின. தந்திரமாக இயந்திரம் கப்பல் வியாபார சுதந்திரத்தை மந்திரம்போட்டு மங்க வைத்துவிட்டது. சுதேசக் கப்பல் வாணிபம் என்றுதான் புத்துயிர்பெற் றெழுவதோ !

ஸ்ரீ. மாருதி தாஸன்.

*

---




## இஞ்சி உற்பத்தி.

**பயிர் செய்தல்.**

இஞ்சி இயற்கை விளைபொருள் பலவற்றுளொன்று. இது ஆசியா, அமெரிக்கா, ஆப்பிரிக்கா முதலான தேசங்களின் உஷ்ணப் பிரதேசங்களில் பெரிதும் உற்பத்தி செய்யப்படுகின்றது. இஞ்சி இந்தியாவின் எந்தப் பாகத்திலும் உண்டாக்கப்படலாம். இது விவசாய சம்பந்தமானதாயினும் இதனை விளைவித்துச் சுத்தஞ்செய்து விற்பனைசெய்யும் முறைகள் கைத்தொழிலின் பாற்படுமாதலின் அவற்றை இத்தலையங்கத்தினடியில் வரையலாயினோம். தோட்டங்களிலும், சாதாரணமாக வீட்டின் பின்பாகத்திலும் இஞ்சியைப் பயிர் செய்யலாம்; மழை காலத்திற்குச் சிறிது முன்பு நிலத்தை உழுது பண்படுத்தி, இஞ்சியைப் பயிர்செய்து எட்டு ஒன்பது மாதங்களில் பயனடையககூடும். ஆறடி சதுர அளவுள்ள பாத்திகளை ஒரு அடி ஆழம் பறித்து முதல் மழை பெய்தவுடன் அவற்றில் இஞ்சியை விதைத்துவிட வேண்டும். பொதுவில் எல்லாப் பயிர்களுக்கும் பொருத்தமான பூமியே இஞ்சிக்கும் ஏற்றதாகும். பசுஞ்சாணத்தைத தண்ணீரில் கரைத்து இஞ்சியின் பசுமையான முளைகளை அதிற்றோய்த்து, ஒருமுளைக்கும் மற்றொரு முளைக்கும் ஒரு அடி இடைவெளிவிட்டு இரண்டு அங்குல பள்ளத்தில் நட்டுவிட வேண்டும். மழை பெய்யாத காலஙகளில் அதற்கு அடிககடி அதிகமாகத் தண்ணீர விட்டுவரவேண்டும். தண்ணீரே அதற்கு முக்கிய ஜீவாதாரமானது. அடிக்கடி களைகளைப் பிடுங்கிப் பாத்தியைச் சுத்தப்படுத்த வேண்டும். தண்டுகள் விளைந்து முற்றிக் காய்ந்த பின்னர் அவற்றைப் பிடுங்கி விடலாம். சில சமயங்களில் சில பிரதேசங்களில் உள்ளவர்கள் இரண்டாண்டுகள் வரை பயிரை விட்டுவைக்கின்றார்கள். சரியாகப் பன்னிரண்டு மாதங்கள் அவற்றைப் பயிராகும்படி விட்டு விடுவதும் சில இடங்களிலுள்ளவர்களா லனுசரிக்கப் படுகின்றது. ஆனால் மழையில்லாத கோடைக் காலங்களில் அப்பயிர்களுக்கு அடிக்கடி தண்ணீர் விட்டுக்கொண்டே யிருக்கவேண்டும். இஞ்சிச் செடியின் தண்டு பொதுவாக மூன்று அல்லது நான்கடி உயரம்வரை ஒவ்வோராண்டும் பலன் கொண்டு, புதிதாக நடப்பெறும். அச்செடியினுடைய வேரின் ஒரு பகுதியே இஞ்சியெனப் படுகிறது. இப்பயிரைத் தாவரநூலோர் ஈராண்டுப் பயிர் வகையிற் கூட்டியுள்ளாராயினும், பெரும்பாலும் ஓராண்டிலேயே இது நல்ல பயனடையக்கூடியதா யிருக்கின்றது. ஜமைக்காவில் இந்த இஞ்சியின்வேர் மார்கழி தை மாதங்களில் அச்செடியின் தண்டு உலர்ந்த பருவம் பார்த்து வெட்டியெடுக்கப் படுகின்றது.

இஞ்சிகளை வெட்டியெடுத்த பின்னர் அவற்றை அழுக்கில்லாதபடி நன்றாகக் கழுவவேண்டும். சில சமயங்களில் இஞ்சிப் பயிர்த்தொழிலாளர் மேன்மையான இஞ்சியை உண்டாக்குவதற்கும், இஞ்சிப் பயிருக்கியல்பான சில நோய்களைப் போக்குவதற்கும் அதன் மேற்றோலைச் சுறண்டி இஞ்சியின்

சுத்த வெண்மையான பாகத்தைத் தனியாகச் சேகரித்து வைப்பார்கள். இஞ்சியின் மேல்தோலைச் சீவாமலும் வைப்பதுண்டு. ஆகவே இஞ்சி இரண்டு பிரிவினுட்படும். இஞ்சியினுடைய உயர்வு தாழ்வுகளை யறிய, அவற்றில் தோலற்றது, தோலுள்ளது முதலியவற்றையும், அவற்றின் உருவம், நிறம், முதலியவற்றையும் கவனிக்க வேண்டும். முதற்றர இஞ்சிவேர்கள் தோலற்றுக் கொழுத்துப் புஷ்டியுள்ளனவாயும், வெண்மை யல்லது இலேசான வைக்கோல் நிறமுடையனவாயும், மிருதுத் தன்மையுள்ளனவாயும், மாவைப் போன்றும், சிறுசிறு பிளவுகளுள்ளனவாயும், சிவப்பும் குங்கிலிய வாசனையுமுள்ள மேற்றோலையுடையனவாயுமிருக்கும். அவற்றின் உருசி மிகவும் உறைப்பாகவும், துடிப்புள்ளதாயும், நல்ல வாசனையுள்ளதாயு மிருக்கும். மட்டமான இஞ்சியின்வேர் அதிக தோற்பிடிப்புள்ளதாயும் புஷ்டி அதிகமில்லாமலும், அடிக்கடி சுருங்கியும், வடிவில் மாறியும், கருப்பாக மங்கலான மஞ்சள் வர்ணமுடையதாகவும், சக்கை சக்கையாகப் பிரிந்து காரமும் வாசனையும் குறைந்ததா யிருக்கும். இவையே இஞ்சிகளின் உயர்வு தாழ்விற்குரிய இலக்கணங்களாம்.

தொழில் வகை.

### தோல் சுறண்டப்பட்ட இஞ்சியிற் பலவகைகளுண்டு.

1. ஜமைக்கா இஞ்சி: இது வெளிறின நிறமுள்ளது. இதன் உயர்ந்த வகை பெரிதாகவும், சதைப்பற்றுள்ளதாகவும், மிருதுவாயும், கடினமானதாயும், விளக்கமான மங்கல் வர்ணமுடையதா யிருக்கும். தாழ்ந்தவை கரு நிறத்துடன் முதல் வகை இஞ்சியைவிடச் சிறிது கடினமானதாக இருக்கும்.

2. மலையாள இஞ்சி: ஜமைக்கா இஞ்சிக்கும் மலையாள இஞ்சிக்கும் பேதாபேதம் அதிகமில்லை. இவை அவற்றைப் போன்ற தோற்றமும் மணமும் உடையனவாய், தோலின் நிறம் மட்டிலும் அவற்றைவிட அதிகச் சிவப்பு அல்லது பழுப்புவர்ணமுடையனவா யிருக்கும். 3. வங்காளட்டு இஞ்சி: இது தோலில்லாத ஒருவித இஞ்சிவகை. ஜமைக்கா இஞ்சியைவிட அழுத்தமான நிறமுள்ளது. மலையாள இஞ்சியைவிட கடினமும் ஆழ்ந்த நிறமுமுடையது.

சுத்த இஞ்சி வகைகள்.

### தோல் நீங்கப்பெறாத சில முக்கிய இஞ்சியின் வகைகளாவன:—

1. பார்போடாஸ் (Barbadoes) இஞ்சி: இது தட்டையாயும் ஜமைக்கா இஞ்சியைவிட அழுத்தமான நிறமுடையதாயுமிருக்கும். சுருக்கம் விழுந்த தோற்பற்றுள்ளது. 2. மலையாள இஞ்சி: இது சிறு சிறு துண்டுகளாகவும் கருப்பாகவு மிருக்கும். 3. வங்காள இஞ்சி: இது தோல் சுறண்டப்படாது கடினமானதாகவும், மங்கல் வர்ண முடையதாகவும், மேற்பாகம் சாதாரண மலையாள இஞ்சியைப்போல நாருள்ளதாயில்லாமலும், சிறிது சதைப் பற்றுள்ளதாகவும், மாவு போன்றுமிருக்கும். 4. சிர்ரா லியோன் (Sierra Leone) இஞ்சி: இது பார்போடாஸ் இஞ்சியைவிட, அதிக தட்டை வடிவுள்ளதாகவும், கொஞ்ச பாகம் மாவுள்ளதாகவும் அமைந்திருக்கும். ஏனைய விஷயங்களில் பார்போடாஸ் இஞ்சிக்கும் இவ்வகை இஞ்சிக்கும் எவ்வித பேதமு மின்றும்.

தோல் பொருந்திய இஞ்சி வகை.

(தொடரும்)

S. V. வரதராஜையங்கார், உறையூர்.




(276-ம் பக்கத் தொடர்ச்சி.)

## காயத்திரி சந்தியாவந்தனம்.

காயத்திரி என்பதும், சந்தியாவந்தனம் என்பதும் ஏறக்குறைய ஒன்றெனவே சொல்லலாம். காயத்திரி என்பது யாதெனில் நாள்தோறும் காலை மாலைகளிலும், இதரகாலங்களிலும் பகவானை நினைத்தலாகிய தொழிலாம். அப்படி நினைப்பது எதற்காகவெனில் உயிர்களின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்துகொள்வதற்காகவே. காயத்திரியை அனுஷ்டிக்கும் விதங்கள் பலவகைகளாகக் கூறப்பட்டுள்ளன. அவையாவன:—

பரிசுத்தமான இடத்தில் அமர்ந்துகொண்டு மனதில், மூன்று லோகத்தையும் எந்த சைதந்நியம் தாங்கிக்கொண்டிருக்கின்றதோ அத்தகைய சொர்க்கதேவனாகிய நீர் என் புத்தியை சூட்சுமப்படுத்தும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன்; தவிரவும் அத்தகைய கடவுளாகிய உன்னை,

(1) (விஷ்ணு) வியாபக சொரூபமாகிய சங்குசக்ரதாரியாகிய திருமால் ரூபமாக நான் பாவிக்கின்றேன்.

(2) (சிவன்) மங்களரூபமாகிய பார்வதிசமேதராய ரூபமாக பாவிக்கின்றேன்.

(3) (அம்பாள்) யாவற்றையும் உண்டுபண்ணி யொடுக்கும் பாசாங்குசதாரியாகிய ஈஸ்வரிரூபமாகப் பாவிக்கின்றேன்.

(4) (கணேசன்) சங்கல்பரகிதமாய் எங்கும் நிறைந்துள்ள பாசாங்குசதாரியாகிய விநாயகரூபமாகப் பாவிக்கின்றேன்.

(5) (சூரியன்) எங்கும் நிறைந்த பிரகாசமான ஆதித்தவடிவாகப் பாவிக்கின்றேன் என்பனவாம்.

இவ்வாறு பாவனை செய்துகொண்டு வாக்கினால் தம் மனதில் தோன்றிய இஷ்டத்திற் கேற்றபடி எனக்குச் சொர்க்கலோகம் கிடைக்கட்டும் என்றாவது, அல்லது நான் நீண்டகாலம் உலகில் வாழவேண்டும் என்றேனும், அன்றி நான் சக்ரவர்த்தியாய் இருக்கவேண்டும், அல்லது நான் தேவமாதர்களை அடையவேண்டும், அல்லது அழகிய பெண் எனக்குக் கிடைக்கவேண்டும் என்றேனும், அல்லது நான் யாவரினும் படித்தவனாக விளங்கவேண்டும் என்றாவது, அல்லது நான் அதிக பலசாலியாக இருக்கவேண்டும் என்றாயினும், அல்லது எனக்கு அதிக திரவியம் கிடைக்கவேண்டும் என்றாவது, அல்லது என் விரோதிகள் நாசமடையவேண்டும் என்றேனும் இப்படிப் பலவிதமாக மனிதர்கள் ஒருலக்ஷம் முறைகளுக்குக் குறையாமல் நினைத்து வருவார்களேயானால் அவர்களின் மனோசக்தியின் பயனாக அவரவர்களின் இஷ்டங்களைப் பூர்த்திசெய்துகொள்ளலாம். இவற்றின் மேலான மார்க்கமானது யாதெனில், மூன்றுலோகத்தையும் எந்த சைதன்னியம் தாங்கிக்கொண்டிருக்கின்றதோ அந்த சைதன்னியத்தின் பாதாரவிந்தம் எனக்குக் கிட்டட்டும்; அல்லது எந்த வஸ்துவானது எல்லாமாய் இருந்துகொண்டு வருகின்றதோ அந்த வஸ்து என்னிலும் கலந்திருப்பதாக என்புத்தி திடப்படட்டும்; தவிர

எந்த வஸ்து யாவற்றையும் விளக்கிக்கொண்டும், யாவுமாகியும், தன்னையன்றி வேறெதுவும் இல்லாமல் தான் தானாகவே எப்போதும் இருந்துவருகின்றதோ, அந்த வஸ்துவில் நான் வேறில்லாததான நிச்சயம் எனக்குக் கிடைக்கட்டும் என்று நினைத்தலேயாம்.

தீர்க்கமான ஒரே சங்கல்பம் எங்கு நிகழ்கின்றதோ அங்கு அச்சங்கல்பத்தின் பலன் நிகழ்கின்றது. ஆகையினாலேயே சகல சாஸ்திரங்களும் அவாவினாலேயே அதாவது எந்த அவாவோடு உயிர்பிரிகின்றதோ அந்த அவாவினாலேயே அதற்கேற்ற பிறவி கிடைக்கின்றது; ஆதலினால் அவாவின் மேலேயே மோட்சம் கிடைக்கும் என்று சொல்லுகின்றன. இதன்படி நடந்த பல புராண கதைகளில் ஒன்றை இங்குக் குறிப்பிடுகிறோம்: பாரதத்தில் ஜனமேஜெயமகாராஜன் சர்ப்பயாகம்செய்து சகல சர்ப்பங்களையும் அக்கினியில் பிரவேசிக்கச் செய்தானென்று சொல்லுமிடத்து, கூறப்படுகிறதாவது: "அங்கு என்ன நிகழ்ந்தது என்று கேட்பீர்களானால் சக்ரவர்த்தியின் போஜனத்தை உட்கொண்டு சகல சாதுக்களும் அக்கினியின் பக்கத்திலமர்ந்து, 'குறித்த பெயருள்ள எல்லாச் சர்ப்பங்களும் இந்த அக்கினியில் பிரவேசமாக வேண்டும்' என்று லக்ஷம் தரம் நினைத்தார்கள்; அப்படி நினைத்த அவர்களின் மனோசக்தியானது சர்ப்பங்களின் மனதை வசீகரித்து அவர்கள் கோரியபடி சகல சர்ப்பங்களும் அக்கினியில் பிரவேசிக்கும்படி செய்துவிட்டது" என்பதே. இதுவே காயத்ரி என்று சொல்லப்படும்.

(தொடரும்) டாக்டர். மே. மாசிலாமணி முதலியார்.

## ஓர் விநோதமான பிழைக்கும் வழி.

அநேக பத்திரிகைகளில் தாம் போடும் விடுகதைகளுக்கு ஒரு அணா தபால் பில்லையுடன் விளக்காரர் குறிப்பிட்டபடி சரியான பதில் அனுப்புகிறவர்களுக்கு ரூபாய் 5. இனாமளிக்கப்படும் என்று சிலர் பிரசுரம் செய்கிறார்கள். அதனைக் கண்ணுறும் வினைய நண்பர்கள் மேல்கண்ட பரிசு பெற ஆசையுற்று வீணாக ஒரு அணாவை அனுப்பி மேல்கண்ட பரிசுக்கு ஏமாந்து ஏங்கி நிற்கிறார்கள். அப்படியே 200, 300 நண்பர்கள் விடையளிக்கிறார்களென்று வைத்துக்கொள்வோம். இறுதியில் ஒருவருக்குத்தானே அது கிடைக்கும். அதினால் பிரஸ்காரருக்கு ரூ. 12-8-0 அல்லது 18-12-0 கிடைத்துவிடுகிறது. மேல்கண்டபடி பரிசு ரூ. 5-0-0 போக பாக்கி பிரசுரம் செய்தவருக்கே சேர்ந்துவிடுகிறது. இந்தவிதமான மோசம் எதற்காக? நமது ஆனந்தபோதினி நண்பர்கள் இந்தவிதமாக ஏமாறாமலிருப்பதற்கும், அவ்விதம் செலவு செய்வதைவிட அதை நமது ஆனந்தனுக்கே உபயோகப்படும்படி செய்தால் எவ்வளவு மேன்மையாகவும் கௌரவமாகவும் இருக்கும் என்பதுபற்றியும் நான் இதைக் குறிப்பிடலானேன்.

S. P. ராமையா, 11131 செ. சந்தாதார், ஜேம்ஷெட்பூர்.

# இராட்டினக் கும்மி.

1. இன்பங் கொடுப்ப திராட்டினமே - செல்வ
மெல்லாந் தருவ திராட்டினமே
துன்பங் கெடுப்ப திராட்டினமே - கெட்ட
சோம்ப லொழிப்ப திராட்டினமே.

2. வாழ்வு தருவ திராட்டினமே - காந்தி
மாதவர் சொன்ன விராட்டினமே
தாழ்வு வராமலே யிந்தியர் தங்களைச்
சந்ததங் காப்ப திராட்டினமே.

3. ஆனந்த மீவ திராட்டினமே - நல்ல
அன்பை வளர்ப்ப திராட்டினமே
ஈனந் தருகின்ற தீவினை போக்கி
எவரையுங் காக்கு மிராட்டினமே.

4. அன்னந் தருவ திராட்டினமே - நமக்
காடை யளிப்ப திராட்டினமே
பின்ன மில்லாமல் வறுமை யொழித்துப்
பெருமை கொடுப்ப திராட்டினமே.

5. பொன்னகை யீவ திராட்டினமே - நற்
புகழைத் தருவ திராட்டினமே
கன்னியர் தங்களை நேர்வழியில் வைத்துக்
காத்து வருவ திராட்டினமே.

6. மண்ணிற் பிழைக்கப் பிறர்கையை நாடியே
வாடித் திரிந்து மயங்காமல்
கண்ணிய மாகப் பிழைக்கும் வழிதனைக்
காட்டு முயர்ந்தகை ராட்டினமே.

7. நம்பொரு ளன்னியர் கொள்ளாமலிங்கு
நாடியே செய்யு மிராட்டினமே
வம்பு வழக்கில் புகாம லிருக்கநல்
மார்க்க முரைப்ப திராட்டினமே.

8. நல்லறஞ் செய்து விருந்தினர் தங்களை
நாளு முபசரித் திவ்வுலகில்
இல்லறஞ் செய்ய வழிதனைக் காட்டியே
எங்கு மிருப்ப திராட்டினமே.

9. பாவத்தைப் போக்கு மிராட்டினமே - தெய்வ
பக்தியுண் டாக்கு மிராட்டினமே
பூவிற் பெருகு மறிவை வளர்த்துநற்
புண்ணியஞ் சேர்க்கு மிராட்டினமே.

10. ஆதலாற் காந்தி மகானமக் காக
அமைத்த வுயர்கை யிராட்டினத்தைப்
பூதலமீதுநாம் சுற்றியே வாழ்ந்துநற்
பொன்பெறு வோநாளு மின்புறுவோம்.

வீ. ஆறுமுகந் சேர்வை, செம்பூர்.

# அறிஞரின் அமுதமொழிகள்.

1. To the noble mind
Rich gifts wax poor, when givers prove unkind.
*Shakespeare.*

கொடுப்பவர்கள் பட்சமில்லாதவர்களென்று தெரியுமானால், அவர்களால் கொடுக்கப்படும் சிறந்த வெகுமதிகள் பெருந்தன்மையுள்ளவர்களுக்கு 'அற்பமாகும். (ஷேக்ஸ்பியர்.)

2. Money has the effect of enslaving people.

செல்வத்திற்கு மனிதர்களை அடிமைப்படுத்தத்தக்க தன்மை உண்டு.

3. Marriage brings happiness only when the purpose in life of both is one and the same.

(ஆண், பெண் ஆகிய) இருவர்களுடைய கோரிக்கை தம் வாழ்வில் ஒன்றாயிருந்தால்தான் விவாகம் சந்தோஷம் தரும்.

4. The love of wife and children is not human love. Human love is the love of man for man.

மனைவி மக்களிடத்திலுள்ள அன்பு மானிட அன்பல்ல. மானிட அன்பென்பது ஒரு மனிதனுக்கு மற்றொரு மனிதனிடத்திலுள்ள அன்பேயாகும்.

5. The eternal life beyond the sky
Wealth cannot purchase. *Longfellow.*

ஆகாயத்திற்கப்பால் இருக்கும் நித்திய வாழ்வு செல்வத்தினால் அடைய முடியாது. (லாங்பெல்லோ.)

6. My strength is as the strength of ten,
Because my heart is pure. *Tennyson.*

என்னுடைய மனது பரிசுத்தமா யிருப்பதனால் நான் பத்து மனிதர்களுடைய பலத்தையுடையவனா யிருக்கிறேன். (டென்னிஸன்.)

7. Love all, trust a few, do wrong to none.
*Shakespeare.*

எல்லாரையும் நேசி, சிலரை நம்பு, ஒருவருக்கும் கெடுதிசெய்யாதே. (ஷேக்ஸ்பியர்.)

8. Condemn the fault, and not the actor of it.
*Shakespeare.*

தப்பிதத்தைக் கண்டனஞ்செய்; அதைச் செய்பவனைக் கண்டனஞ் செய்யாதே. (ஷேக்ஸ்பியர்.)

9. Evil recoils upon the head of evil-doers.

கெடுதி செய்வோர்களுக்குக் கெடுதியே நேரிடும்.

A. P. இராமன், B. A.






## கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(331-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆனந்தஸிங்:**—அதிகமொன்றுமில்லை. எனக்கு நிச்சயமாய் ஏதாவது தெரியும் போது தெரிவிக்கிறேன். அதற்கிடையில் ஒன்றும் கூறமாட்டேன். நீர் என்னைப் பூரணமாக நம்பவேண்டும்.

**ஆனந்த:**—வீட்டிலிருந்து புறப்படும்போது, "உலகநாதம் பிள்ளையின் மனைவிக்குப் பணம் களவாடப்பட்ட சங்கதி தெரியுமென்றே நம்புகிறேன்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

அதன்மேல் அவன், "ஒருவண்டி பேசிக்கொண்டு 17-வது வீதியிலிருக்கும் நாஷனல் பாங்கிக்கு வண்டியை விடு" என்று சாரதிக்குக் கூறினான்.

அவன் வண்டியில் உட்கார்ந்ததே, "சரி, இப்போது இதுவரையில் நான் என்ன அறிந்து கொண்டேன்? முதலாவது மனோன்மணி தன் தந்தையிடமிருந்து பூட்டின் இரகசியத்தை அறிந்து கொண்டதால் அப்பெட்டியைத் திறந்தவளல்லவென்பது நமக்கு நன்றாய்த் தெரிகிறது. அப்படி அவளே திறந்திருந்தால் அந்த ஸீல் செய்த கடிதத்திலிருந்ததைக் கண்டே அவள் திறந்திருக்க வேண்டும். அதையவள் தன் தாயின் உதவி யின்றிச் செய்யமுடியாது. இது உண்மை. ஆகையால் அவள் தாயார் இக்களவிற்கு உதவி செய்திருக்கிறாள்.

இதுமட்டும் நிச்சயம். உலகநாதம் பிள்ளையின் மனைவி துயரத்தால் மனமுடைந்திருக்கிறாள்; தன்புத்திரி எங்கிருக்கிறாளென்பதை அவள் அறியாள். ஆனால், நடந்த களவில் அவளுக்கு உதவியாவது செய்திருக்கிறாள். அல்லது தன்பெட்டியிலிருக்கும் கடித உறையை யாரோ திறந்திருக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டாவது இருக்கிறாள். அவளுக்குப்பணம் எங்கிருக்கிறதென்று தெரியும். ஆனால் பெண் எங்கிருக்கிறாளென்று தெரியாது.

அவள் தன்பெண் போய்விட்டதற்காக வியாகுலப்படுவதோடு ஏதோ வேறொன்று அவள் மனதில் வாதித்துக் கொண்டிருக்கிறது. நான் கிருஷ்ணஸிங் புத்திரன் என்பது உண்மையாயின் அதையெப்படியும் கண்டு பிடிப்பேன்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான். தன்தொழில் எவ்வளவுக்கெவ்வளவு கஷ்டம் அதிகமாய்த் தோன்றியதோ அவ்வளவுக்கவ்வளவு அவனுக்குச்சந்தோஷம் அதிகமாயிற்று.

---

### 4-வது அத்தியாயம்.

வண்டி பாங்கியெதிரில் நிறுத்தப்பட்டதும் ஆனந்தஸிங் இறங்கி யுள்ளே சென்றான். அந்தப் பாங்கியில்தான் அவனும் அவன் தந்தையும் தங்கள் பணத்தை வைத்து வைப்பது. ஆகையால் அவன் வந்த வேலைக்கு அது அனுகூலமான உதவியாகவே யிருந்தது.

பாங்கிக்குள் நுழைந்ததும் நேராய்ப் பொக்கிஷதாரன் இருக்கும் அறைக்குச் சென்ருன். கிருஷ்ணுஸிங்குக்குத் துப்பறியும் விஷயத்தில் அப் பொக்கிஷதாரன் பல சமயங்களில் உதவி செய்திருப்பவனுதலால், வந்த வனைக் கிருஷ்ணுஸிங்கேயென்று நம்பிக்கொண்டு, "வாரும் வாரும்; ஏதே னும் துப்பறியும் விஷயமாய்த்தான் வந்தீர்களோ?" என்ருன்.

ஆனந்:—"ஆம்; சில ஆயிரம் டாலர் உண்டிகள் களவு போயிருக்கின்றன. உன் மூலமாக மற்ற பாங்கிகளுக்கும் டெலிபோன் கொடுத்து அவற் றில் ஒன்றிரண்டு எங்காவது கொண்டுவந்து மாற்றப்பட்டிருக்குமா என்று விசாரிக்கலாமென வெண்ணிவந்தேன்" என்ருன்.

அவன் சொல்லி முடிப்பதன்முன் பொக்கிஷதாரன் தட்டென்று எழுந்து அறையைவிட்டு வெளிச்சென்றதைக்கண்ட ஆனந்தஸிங் மிக்க வியப்போடு "என்ன! என்ன விசேஷம்?" என்ருன்.

பொக்கிஷதார் ஒன்றுங் கூருமற்சென்று இரண்டு நிமிடங்களில் கையில் ஒரு ஆயிரம் டாலர் உண்டியோடு திரும்பிவந்து, "இதோ இது அரைமணி நேரத்திற்கு முன்பே மாற்றப்பட்டிருக்கிறது. நம்பர் தெரியுமா?" என்ருன்.

ஆனந்:—தெரியாது. ஆயினும் இதை யார் கொண்டுவந்து மாற்றியவர்? நீ பார்த்தாயா?

பொக்கிஷ:—"இல்லை. பணம் எண்ணிக் கொடுத்தவனை யழைத்து வருகி றேன் இரும்." என்று கூறிவிட்டுச் சென்று ஒரு வினுடியில் அவனை யழைத்து வந்து, "இதோ இந்த உண்டியை யார் கொண்டுவந்து மாற்றி யவர் தெரியுமா?" என்று வினவினுன்.

பணம் கொடுத்தவன்:—"ஆம். இது பெரிய தொகையாதலால் நான் அவளை யும் அவனையும் நன்ருய்க் கவனித்துப் பார்த்தேன்" என்ருன்.

ஆனந்த:—"ஹா! இரண்டு பேர்! எப்படி யிருந்தார்களென்று விவரமாகக்கூறு பார்ப்போம்" என்ருன்.

அம்மனிதன்:—அப்பெண்ணுக்குப் பதினெட்டுப் பத்தொன்பது வயதிருக் கும். அவள் நடுத்தரமான உயரமுடையவள். மிக்க அழகு வாய்ந்தவள். அவளுக்கு அகன்ற கண்கள். சிறியவாய். சிவந்த உதடுகள். அவள் ஊதா நிறமுள்ள பட்டுச் சேலையும், கொரநாட்டுப் பட்டுப்பூரான் இரவிக்கை ஓரத்தில் சரிகை வைத்துத் தைத்ததும் அணிந்திருப்பாள்" என்ருன்.

ஆனந்தஸிங் அவற்றைக் கேட்டதும் மிக்க வியப்படைந்து திடுக்கிட்டு, "பேஷ்; நீ மிக்க கவன சக்தியுடையவன். அப்பெண்ணை மறுபடி கண்டால் தெரிந்து கொள்வாயா?" என்ருன். அம்மனிதன், "ஆகா; தடையின்றித் தெரிந்து கொள்வேன்" என்ருன்.

ஆனந்தஸிங் உடனே தன் மடியிலிருந்த புகைப்படத்தை யெடுத்துக் காட்டினுன்.

அதைக் கண்டவுடனே அம்மனிதன் உடனே "ஆம் ஆம்; இவளே இவளே" என்ருன்.

ஆனந்தஸிங் பேரிடி விழுந்தவன்போல் சற்றுநேரம் அசைவற்று மரம் போல் நின்று விட்டான். பணம் கொடுத்தவன் கூறியதில் அவனுக்கு எள் ளளவும் சந்தேகமேயில்லை. ஆனுல் அது இவன் கனவிலும் எதிர் பாராத சங்கதி.

ஆனந்தஸிங் மறுமடி யம்மனிதனை நோக்கி, "சரி; அவள்கூட வந்தவன் எப்படியிருந்தான்?" என்றான்.

அம்மனிதன்:—"அவனை நான் அதிகமாய்க் கவனிக்கவில்லை. அப்பெண்ணே உண்டியைக் கொடுத்தவள். அவன் பெரும்பாலும் சாளரத்தின் வழியாக வெளியில் பார்த்துக்கொண்டும், முன்னும் பின்னும் உலவிக் கொண்டு மிருந்தான். அவனுக்கு வயது இருபத்தாறு இருக்கலாம். அவன் கொஞ்சம் கறுப்பு நிறமுடையவன். அவனுக்குக் கறுப்புமயிர். மீசை மட்டுமிருக்கிறது; தாடியில்லை. அவனுடைய வலது கண்ணின் புருவத்திற்கருகில் கத்தியால் அறுக்கப்பட்டது போன்ற சுமார் அரையங்குல நீளமான ஒரு வடுவிருக்கிறது. அவனும் அழகுடையவனே. அவன் உண்மையில் நாணயமானவனே யாயினும் கூலிக்காரர்போன்ற உடையணிந்திருந்தான். அவன் நீண்ட மேல்அங்கி சாதாரணமாய்க் குதிரை வண்டி யோட்டும் சாரதிகளணிவது." என்றான்.

ஆனந்:—அவர்கள் இங்குவந்தபோது மணியென்ன விருக்கும்?

அம்மனிதன்:—பத்துமணி யடித்தவுடனே; இப்போது மணி பதினொன்றிருக்கும். இன்னம் என்னாலறிய வேண்டியதொன்றுமில்லையே?

ஆனந்தஸிங்:—"வேறொன்றுமில்லை. உனக்கு மிக்க வந்தனம்" என்று கூறிவிட்டு மறுபடி வண்டியேறி நேராய் உலகநாதம் பிள்ளையின் பாங்கிக்குச் சென்றான். சீக்கிரத்தில் இராஜவேல் என்பவனைக் காணவேண்டும் என்பது அவன் கருத்து. அவன் மனோன்மணி சுத்த நிரபராதி யென்றே யிதுகாறும் நம்பியிருந்தான். இப்போது அறிந்த விஷயங்களால் அவளும் வேறொருவனும் களவாடினார்களென்றும், அல்லது அவளே களவாடினாளென்றும், அவர்கள் இருவருமே பாங்கிக்குச்சென்று ஒரு உண்டியை மாற்றினார்கள் என்றும் புலப்படுகிறது. இது எவ்வளவு அதிக மர்மத்தில் செல்கிறதோ அவ்வளவும் ஆனந்தஸிங்குக்குச் சந்தோஷமே.

வண்டி பாங்கியை நோக்கிச் சென்று கொண்டே யிருக்கையில் ஆனந்தஸிங் பாதையோரத்தில் மனிதர்கள் செல்லும் மேடை வழியில் ஒரு அழகிய கன்னிகை நின்றுகொண்டிருப்பதைத் தற்செயலாய்க் கண்டான். அவள் ஒரு வண்டிக்காரனிடம் என்னமோ பேசிக்கொண்டிருக்கிறாள். ஆனந்தஸிங் உடனே வண்டிக்காரனை மெதுவாய் ஓட்டும்படி சமிக்கை செய்துவிட்டு அக்கன்னிகையை நன்றாய் உற்று நோக்கினான். உடனே அவன் மிக்க வியப்படைந்து, "ஆஹா! மனோன்மணியே" என்று தனக்குத்தானே கூறியதும் சட்டென்று ஜேப்பியில் கையிட்டு ஒரு ரூபா யெடுத்துச் சாளரவழியாய்ச் சாரதியிடமளித்து மெதுவாய், "நான் வண்டியைவிட்டு இறங்கிவிடப் போகிறேன். ஆனால் நீவண்டியை நிறுத்தாமல் மெதுவாக ஓட்டிககொண்டேபோ" என்று கூறியதும், மறுவினாடி மிக்க சாமார்த்தியமாய்ப் பூனைபோல் வண்டியிலிருந்து கீழே குதித்து மேடைமேல் நடந்துசெல்லும் ஜனக்கூட்டத்தோடு கலந்து கொண்டான். ஆனால் இடையில் ஒரு வினாடிகூட மனோன்மணியைத் தன் பார்வையிலிருந்து தப்ப விட்டவனல்ல. அவன் எந்த வீட்டையோ தேடுகிறவன்போல் உயரமான வீடுகள் ஒவ்வொன்றையும் நிமிர்ந்து பார்த்துக்கொண்டே மெதுவாய்ச் சென்றுகொண் டிருந்தான்.

(தொடரும்) ஆரணி-குப்புசாமி முதலியார்.

---




**குதிரைப்பந்தயக் குருடர்கள்:**—ஒரு வெள்ளிக்கிழமை யிரவு 12 மணிக்கு வெங்குவைய ரென்பவர் திருவல்லிக்கேணியில் சுந்தரராஜுலு நாயுடு வீட்டிற்கு வந்து சார் சார் என்று வெகுவேகமாகக் கதவைத் தட்டினர். நாயுடு கண்ணைத் துடைத்துக் கொட்டாவி விட்டுக்கொண்டு வந்து "யார் சார் இந்நேரத்தில்" என்றபடி கதவைத் திறந்தார்.

**வெங்குவையர்:**—என்னசார்! தூக்கத்தைக் கெடுத்துவிட்டேனே?

**சுந்தரராஜுலு நாயுடு:**—ஆமாசார்! பகலெல்லாம் பலபேர்க்குப் பந்தயக் கணக்குப்போட்டு மூளை கலங்கிப்போய்விட்டது சார்; ஏது இந்நேரத்தில் வந்தீர்கள்?

**வெங்கு:**—நாளைப் பந்தயங்கட்டப் பணத்துக்குத் தகராராயிருந்தது. இப்போதுதான் ஒரு நண்பர் ஊரிலிருந்துவந்து செலவுக்குக் கொண்டுவந்த பணத்தை என்னிடம் வைத்திருக்கும்படி கொடுத்தார். அதைப் பந்தயம் கட்டிவிடலாமென்று நினைத்து ஓடிவந்தேன். போனவார பந்தயத்தில்தான் அந்தக் குதிரைக்கு நடுமத்தியில் கால் சுளுக்கிக்கொண்டதால் அது பிந்திவிட்டது; அதனால் என்னுடைய ஆயிரம் ரூபாயும் போய்விட்டது. நாளைப் பந்தயத்தில் ஜெயிக்கும்படி சரியான கணக்குப்போட்டு முதலில்வரும் குதிரையைச் சொல்லுங்கள் சார்; ஒரு சான்ஸ் பார்த்துவிடுகிறேன்.

**சுந்தர:**—சார்! நான் போடும் கணக்குத் தவறாது, வேறு ஏதாவது இடையூறு சேர்ந்தல்லவா கெட்டுப்போகிறது.

**வெங்கு:**—சரி; சீக்கிரம் பார்த்துச் சொல்லுங்கள்.

நாயுடு அரைமணிநேரம் கணக்குப்போட்டு மூன்று குதிரைகளின் நம்பரைக் குறித்துக் கொடுத்தார். ஐயர் அவருக்கு ஐந்து ரூபாய் பீஸ் கொடுத்துவிட்டு மறுநாள் கிண்டிக்குப்போய் அந்த மூன்று குதிரைகளின் பேரிலும் சிநேகதனுடைய பணத்தைப் பந்தயங் கட்டினர். குதிரைகள் முதலில் வராமல் பணமெல்லாம் தொலைந்துவிட்டது. ஐயர் முகவாட்டத்துடன் நாயுடுவிடம்வந்து சங்கதியைச் சொன்னர். நாயுடு, "அந்த ஜாக்கிப்பயல்கள் செய்த வேலைசார்; குதிரைகளைப் பிந்தும்படி செய்துவிட்டார்கள்" என்று சமாதானங் கூறிவிட்டார். ஐயரிடம் சிநேகிதன் பணத்துக்கு நெருக்கடிபண்ணினன். ஐயர் திண்டாட்டப்பட்டுப் பூனைபோல் விழித்துக்கொண்டிருந்தார். இப்போது இத்தகைய குதிரைப்பந்தயக் குருடர்கள் எங்கும் பெருகியிருக்கின்றனர். மனிதருட் பதர்கள் இவர்களே.

**பேதி யெடுத்த காப்பி:**— அமஞ்சிக் காப்பி குடிக்கும் ஒருவன், ஒரு பணக்காரப் பையனோடு, அவன் காப்பி ஹோட்டலுக்குப் போகும் நேரங்களிலெல்லாம் தவறாமல் சம்மனில்லாமல் ஆஜராகி அவனோடுகூடி அவனுடைய செலவில் இலவசமாகக் காப்பி பலகாரம் சாப்பிட்டு வந்தான். சில தினங்கள் சென்றபின் பணக்காரப் பையனுக்கு அவன்மீது வெறுப்புண்டாகிவிட்டது. அந்த அமஞ்சிக் காப்பிக்காரனை விலக்கிவிட்டுத் தான்மாத்திரம் ஹோட்டலுக்குப் போகவேண்டுமென்று பணக்காரப் பையன் முயன்று

பார்த்தான். என்ன என்னவோ தந்திரம் செய்து பார்த்தும் இலவசக்காப்பிக் காரன் இவனை விட்டபாடில்லை. அதன்மேல் அவன், "இந்தச் சனியன்பிடிப் பானை எப்படித் தொலைக்கலாம்" என்று யோசனைசெய்து ஒரு தந்திரத்தை முடிவுசெய்து ஒரு சேர்வாளக் கொட்டையைத் தூள்செய்து காகிதத்தில் வைத்துமடித்து மடியில் வைத்துக்கொண்டு காப்பிக் கிளப்புக்குப் போனான். இலவசக் காப்பிக்காரனும் வந்து சேர்ந்தான். இருவரும் பலகாரம் சாப்பிட்டு முடிந்தபின் சப்ளைக்காரன் காப்பி கொண்டுவந்து வைத்தான். அப்போது பணக்காரப் பையன், இலவசக் காப்பிக்காரன் ஒருபக்கம் திரும்பும்போது அவனுடைய காப்பியில் அவனுக்குத் தெரியாமல் சேர்வாளக் கொட்டைத் தூளைத் தூவிவிட்டான். பின் இருவரும் காப்பியைக் குடித்துவிட்டுப் போய் விட்டார்கள். இலவசக் காப்பிக்காரனுக்குக் கழிச்சலெடுத்துக் கொண்டது. ஒருநாள் முழுவதும் அவன் படாத பாடெல்லாம் பட்டான். மறுநாள் காப்பி சாப்பிடப் போனபோதும் பணக்காரப்பையன் தன்னுடைய வேலையைச் செய்துவிட்டான். அன்றும் இலவசக் காப்பிக்காரன் அவஸ்தைப்பட்டு மறுநாள் ஹோட்டலுக்குச் சென்றபோது, "இந்த ஹோட்டல் காப்பி பேதியாகிறது; வேறே ஹோட்டலுக்குப் போகலாம்" என்று பணக்கார வாலிபனை மற்றொரு கிளப்புக்கு அழைத்துச் சென்றான். "அவன் வாடா பயலே! எங்கே சென்றாலும் பேதி உன்னை விடமாட்டாது" என்று அங்கும் சேர்வாளத் தூள் பிரயோகம் செய்துவிட்டான். பின் அமஞ்சிக் காப்பிக்காரன் வேறுபல ஹோட்டல்களுக்கு அவனை அழைத்துச் சென்றான். எல்லா இடங்களிலும் பணக்கார வாலிபன் தன்னுடைய வேலையை விடாமற்செய்ததால் அவனுக்குப் பேதியாவது நிற்கவேயில்லை. அதன்மேல் அவன், "அடே அப்பா! இனி மேல் நாம் காப்பி ஹோட்டலுக்குப் போனால் இறந்தே போவோம்" என்று காப்பிக் கிளப்புக்குப் போவதை நிறுத்திக் கொண்டான். பணக்காரன், "அப்பா! சனியன் தொலைந்தது" என்று மகிழ்ச்சி யடைந்தான். காப்பிக் காகப் பிறரைத் தொடர்ந்து திரிவோரை நீக்குதற்கு இது நல்ல உபாயம்.

செம்பியன்.

**தாங்களே க்ஷவரஞ் செய்து கொள்வோர்க்கு எச்சரிக்கை:**—அவரவர்களும் க்ஷவரக்கத்தி (Razor) ஒன்றை வாங்கிவைத்துக்கொண்டு நினைத்த போதெல்லாம் தனித்தனி க்ஷவரஞ் செய்துகொள்ளுவதினால் நாவிதர்கள் பிழைப்புக்கே ஹானி நேரிடுகிறபடியால், இனிமேல் நாவிதர்களெல்லாம் க்ஷவரகத்திசெய்யும் சாலை (Factory) சொந்தக்காரர்களுக்கு நாவிதர்கள் தவிர மற்ற எவருக்கும் கத்தி விற்பனை செய்யக்கூடாதென்று மசோதா ஒன்று கொண்டுவரப் போகிறார்களாம். ஆகையால் தனி க்ஷவரஞ் செய்து கொள்ளும் பழக்கமுடையோர்களே! உசார்! உசார்!!

**பொக்கைகளுக்கு அறிவிப்பு:**—பற்களை இழந்தோர்களுக்குப் பக்குவமான அரியமுறை யாதென்றால், பல் கட்டுபவர்களிடம் சென்று பணத்தைச் செலுத்திப் பல் கட்டிக்கொள்ளுவதைவிட விளாம்பிசினை வாங்கிவைத்துக் கொண்டு இராத்திரியில் நித்திரைக்குப் போவதற்கு முன்னே விழுந்த பற்களையே எடுத்துப் பொக்கையாயிருக்கிற இடத்தில் கொஞ்சம் பிசினையெடுத்துக் கையால் தடவித்தடவி அதனதன் ஸ்தானத்தில் ஒட்டிவிட்டால் அவை அப்படியே பொருந்தி உறுதியாய் நின்றுவிடுமென்று கோமாளி சாஸ்திரியார் வானலோகத்திலிருந்து எக்காளம் ஊதுகிறாராம். பல் வீழுந்த பொக்கைகளே! கைகண்ட இம்முறையை விடாதீர்கள். **அப்பாத்துரை பிள்ளை.**

---

# மதிப்புரை.

1, **சர்வ வருண சமரச விளக்கம்:**—திருச்சிராப்பள்ளி 24-சௌந்தர பாண்டியன் பிள்ளை தெரு, திருவாளர். சி. பி. இராஜகோபால பாரதி அவர்களால் இயற்றப் பெற்றது. நம் நாட்டிலுள்ள மக்களனைவரும் ஒரே சமூகக் கொள்கைக்குக் கட்டுப்பட்டு உண்மைத தோழர்களாய் மன மொன்றுபட்டு வகுப்புப் பேதங்களை யொழித்து சுயேச்சை, சுயமரியாதை, உண்மையறிவு, நல்லொழுக்கம் முதலியவற்றைக் கைக்கொண்டொழுகி நல மடைதற்கான பல வழிகளும் இதில் கூறப்படுகின்றன. ஆதியில் ஜாதி பிரிக்கப்பட்டதற் குரிய காரணமும், இன்ன குணங்களைக்கொண்டு ஜாதி நிர்ணயிக்கப்பட்ட தென்பதும், பூர்வகால ஆரியர் திராவிடர்களின் இயற்கைகளும், வருண பேதத்தால் உண்டாகும் பலாபலன்களும், பிராமணர்களின் தற்காலநிலைமையும், மநுதர்மசாஸ்திரத்தின் நடுநிலையற்ற விதிகளும், இன்னும் பிறவும் கூறப் பட்டுள்ளன. விலை ரூ. 1-0-0.

2 **வைத்திய ஞானக்கும்மி:**—சாத்தன் குளத்தைச்சார்ந்த தச்சமொழி யென்னும் வீரமார்த்தாண்ட நல்லூர்-திருவாளர். ப. ஆ. கந்தசாமிப்பாண்டியன் அவர்களால், செம்பாகமான கும்மியால் இந்நூல் இயற்றப்பட்டது. இந் நூல் 150-கும்மிகளையுடைய மிகச் சிறிய அளவுள்ளது. எனினும், இதில் நாடிப்பரீக்ஷையும், சில கடின வியாதிகளுக்குச் சிறந்த மருந்துகளும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. இது, நம் நாட்டுமக்களுக்கு மிக உபயோக மாகத்தக்கது. விலை அணு $1\frac{1}{2}$.

3. **இராஜா கோபிசந்த்:**—இது யோகஞானமார்க்கத்தை எவருக்கும் எளிதில் போதிக்கக்கூடிய ஒரு சிறந்த நாடகம். திருவூர் - திருவாளர் - மா. இரத்தின சபாபதி முதலியாரவர்களால் இயற்றப்பெற்றது. இதில் உலக வாழ்வு நிலையாமையும், ஆத்மா அடையவேண்டிய பேரானந்த நிலையும், ஆசாரிய சிஷ்யரிலக்கணமும், ஜீவன் முக்தர்களின் உன்னதநிலையும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. வேறு சில அரிய நீதிகளும் காட்டப்பட்டிருக்கின்றன. முக்கிய நிகழ்ச்சிகளைக் காட்டக்கூடிய சில ஆப்டோன் படங்களும் சேர்க்கபபட்டுள்ளன. இது எல்லோரும் விரும்பத்தக்கது. விலை அணு 12.

4. **விஜயசுந்தரி:**—இஃதோர் இனியநாவல். பிஞெங்குவாசி. திருவாளர் காஞ்சிபுரம்-தி. இராஜநாதர் முதலியாரவர்களால் எழுதப் பெற்றது. பெண்மக்கள் எந்நிலையிலிருப்பினும் கற்பைக் காப்பாற்றவேண்டுமென்பதும், வாலிபர்கள் பெண்களை மணக்கும்போது அவர்களின் இயற்கைகளை ஆராயாமல் காதல்மிகுதியால் தங்கள் மனம்போல் கலியாணம் செய்துவிட்டுப் பின்னர் அவர்மீது குறைகூறி வெறுப்பது அறிவுடைமை யாகாதென்பதும், இன்னும் பல அரிய நீதிகளும் இதில் அமைந்துள்ளன. விலை அணு 12.

**உடுதசாபிர தீபிகை:**—இது வடமொழிச் சுலோகங்களால் அமைந்த சோதிடநூல்; இதற்கு கும்பகோணம் சோதிடம் திருவாளர்-சுப்பராம சாஸ்திரியார் அவர்களால் தமிழ் வியாக்கியானம் எழுதப்பட்டிருக்கிறது. இவ் வியாக்கியானமுள்ள இந்நூல் மதுரை-புத்தகசாலை-திருவாளர் K. காசிவிஸ்வநாத பிள்ளை அவர்களால் வெளியிடப் பெற்று நம் பார்வைக் கனுப்பப்பட் டிருக்கிறது. இதில், ஷட்வர்க்கலட்சணம், நவாம்சலட்சணம், துவாதசாம்ச லட்சணம், திசாபுத்தி அந்தராம்ச முதலியன பிரிக்கும் வழிகள், அந்தராந்திர தசாநிர்ணயம் முதலிய பல அரிய விஷயங்கள் விளக்கமாகச் சொல்லப்பட் டிருக்கின்றன; இது, சோதிடர்க்கும், சோதிடவிருப்பமுள்ள மற்றையர்க்கும் மிக அவசியமான நூல். விலை அணு 12.



# வர்த்தமானப்பகுதி

**லண்டனில் ஹிந்து கோயில்:**—இங்கிலாந்திற்கு வரும் வைதிக ஹிந்துக்களின் உபயோகத்திற்காகவும், அவர்கள் வந்தால் தங்குவதற்காகவும், லண்டனில் ஒரு ஹிந்து கோயில் கட்டுவதென்ற திட்டத்தை நிறைவேற்ற ஒரு நிர்வாகக் கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. மிஸ்டர் எச். எஸ் போலக் இதன் தலைவர். மிஸஸ் என். எஸ். ஸென் இதன் உபதலைவர். மிஸ்டர் பாதியா (ஸ்ரீமான் ஜி. பிர்லாவின் பிரதிநிதி) காரியதரிசி. ஸர் அதுலசாட்டர்ஜி, ஸ்ரீமான். பிர்லா, ஸ்ரீமான் ராமகோபால மேத்தா, ஸேத் ஜமன்லால், பாஜாஜ் ஆகியோர் இதற்கு டிரஸ்டிகள். இந்தக் கோயில் கட்ட ஸ்ரீமான் ஜி. டி. பிர்லாவும், ஸ்ரீமான் ராமகோபால மேத்தாவும் ஏராளமான நன்கொடை யளித்திருக்கின்றனர். இந்தக் கோவில் இப்பொழுது இந்திய தேச தோரணையில் நன்கு அலங்கரிக்கப் பட்டிருக்கிறது. ஏப்ரல் மாதத்திற்குள் இந்தக் கோவில் முடி வடையுமெனத் தெரிகிறது. ஆனால் முனிஸிபல் சபையின் அநுமதி இதற்குக் கோரப்படவில்லை.

*** *** ***

**கலியாணஞ் செய்யாதவர்களுக்கு வரி:**—ஜெர்மனியில் கலியாணஞ் செய்யாமலிருக்கும் வாலிபர்களுக்கு வரி விதிக்கவேண்டுமென்று க்ஷேம மந்திரி யோசனை செய்திருக்கிறார்.

*** *** ***

**தபால் விகிதம் குறைக்கப்பட்டது:**—இலங்கைத் தீவில் தபால் விகிதம் தபாற் கார்டுகளுக்கு மூன்று சதமாயிருந்தது. பிப்ரவரி மாதம் முதல்தேதி முதல் அது இரண்டு சதமாகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

*** *** ***

**நூதன ஓசைக்கருவி:**—ஒருமைல் விஸ்தீரணத்திற்கு ஓசை பரப்பும் பெரிய கருவியொன்று சில தினங்களுக்குமுன் நியூயார்க்கில் பரிசோதிக்கப் பட்டது. 10-லக்ஷம் ஜனங்கள் இதன் உதவியால் ஒரு விஷயத்தைத் தெளிவாகக் கேட்கக் கூடுமாம்.

*** *** ***

**எரிமலை:**—நிகாராகுவா ஏரியின் தீவில் ஒமிடேல் எரிமலையில் தீக்குழம்பு கிளம்பி விட்டதாகவும், எரிமலையின் சப்தம் பலமைல் தூரம் கேட்பதாகவும், 10-மைலுக் கப்பாலுங்கூட சாம்பல் தூள்கள் விழுகின்றன வென்றும், புகையினால் சூரியனே மறைந்து விட்டதாகவும் ஓர் செய்தி எட்டுகின்றது.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

பிரபவஹு பங்குனிமூ—கலியுகாதி 5029, சாலிவாகனம் 1850,
பசலி 1337—கோல்லமாண்டு 1103—ஹிஜரி 1346
இங்கிலீஷ் 1928ஹு மார்ச்சுமூ—ஏப்ரல்மூ

| பங்குனி | மார்ச்சுமீ | வாரம் | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | செவ் | சப்60 | அனு23-50 | சி23-50ம | மீனரவி நாழிகை 29-30 |
| 2 | 14 | புத | சப்3-30 | கேட்30-45 | சி30-45ம | சம்பத் கௌரி விரதம் |
| 3 | 15 | வியா | அ8-18 | மூல36-13 | சித்60 | தானியம் செலவிட |
| 4 | 16 | வெ | நவ11-30 | பூரா39-55 | பி39-55சி | கடன்தீர்க்க, மாடுவாங்க |
| 5 | 17 | சனி | தச12-30 | உத்41-30 | சித்60 | யாத்திரை செய்ய |
| 6 | 18 | ஞா | ஏ11-25 | திரு41-5 | அ41-5ம | சர்வ மத்வ ஏகாதசி |
| 7 | 19 | திங் | து8-10 | அவி38-35 | சித்60 | பிரதோஷம், கரிநாள் |
| 8 | 20 | செவ் | திர3-10<br>சது56-18 | சதை34-35 | மர60 | மாச சிவராத்திரி, அவமா<br>கம்,வருணி திரயோதசி |
| 9 | 21 | புத | ●49-18 | பூரட்29-20 | அ26-20சி | சர்வத்திர அமாவாசை |
| 10 | 22 | வியா | பிர41-3 | உத்23-5 | சித60 | யுகாதி பண்டிகை |
| 11 | 23 | வெ | துதி32-35 | ரேவ16-38 | சித்60 | சந்திரதெரிசனம் |
| 12 | 24 | சனி | திரி24-20 | அஸ்10-13 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 13 | 25 | ஞா | சது16-43 | பர4-18<br>கிரு×59-10 | சித்60 | கிருத்திகை,லக்ஷ்மிபஞ்சமி,<br>[ஸ்ரீ பஞ்சமி |
| 14 | 26 | திங் | பஞ்10-0 | ரோ55-5 | அமி60 | சஷ்டி, சீமந்தம் |
| 15 | 27 | செவ் | சஷ்4-23<br>சப்59-55 | மிரு52-18 | சி52-18ம | அவமாகம், கங்கோற்பத்தி |
| 16 | 28 | புத | அ56-48 | திரு50-45 | சித்60 | கரிநாள்,அவமாகம் [நவமி |
| 17 | 29 | வியா | நவ54-58 | புன50-30 | அமி60 | ஸ்ரீராம ஜயந்தி, ஸ்ரீராம |
| 18 | 30 | வெ | தச54-23 | பூசம்51-30 | மர60 | தர்மராஜா தசமி |
| 19 | 31 | சனி | ஏகா54-55 | ஆயி53-40 | சி53-40அ | சர்வ மத்வ ஏகாதசி |
| 20 | ஏப்பிரல்மீ 1 | ஞா | து56-40 | மக56-53 | ம56-53சி | வாமனத் துவாதசி |
| 21 | 2 | திங் | திர59-23 | பூர60 | சித்60 | அனங்கபூஜா விரதம் |
| 22 | 3 | செவ் | சது60 | பூரம்1-3 | சி1-3அ | பங்குனி உத்திரம் |
| 23 | 4 | புத | ச○3-5 | உத்6-10 | அ6-10ம | பௌர்ணமி |
| 24 | 5 | வியா | பவு7-35 | அஸ்12-10 | சித்60 | |
| 25 | 6 | வெ | பிர13-5 | சித்18-58 | சித்60 | |
| 26 | 7 | சனி | துதி19-5 | சுவா26-35 | அ26-35சி | |
| 27 | 8 | ஞா | திரி25-43 | விசா34-15 | மர60 | |
| 28 | 9 | திங் | சது32-15 | அனு42-3 | சித்60 | |
| 29 | 10 | செவ் | பஞ்38-28 | கேட்49-25 | ம49-25அ | |
| 30 | 11 | புத | சஷ்43-45 | மூல55-53 | ம55-53அ | |
| 31 | 12 | வியா | சப்47-33 | பூரா60 | சித்60 | |
| *1 | 13 | வெ | அ49-35 | பூரா0-53 | ப053சி | |

| | | |
|---|---|---|
| சூரி<br>குரு | | ராகு |
| சுக்<br>புத<br>செவ் | 1உ கும்-சுக்<br>17 ,, கும்-செ<br>24 ,, மீன-சுக்<br>25 ,, மீன-புத | |
| | சனி<br>கேது | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY ST., MADRAS.